# குமுதம்

வெரைட்டி ஸ்டார்

## இந்திரா சௌந்தர்ராஜன்

எழுதும்

# உயிர்ச் சிலிர்ப்பு



13 வாரத் தொடர்

அடுத்த இதழில் ஆரம்பம்!



தமிழர்களின் இதயத் துடிப்பு

# குமுதம்

நம்பர் 1 தமிழ் வார இதழ்

₹ 20 (தமிழ்நாடு, புதுச்சேரி)
₹ 25 (மற்ற மாநிலங்களில்)
3.3.2021

## இந்திரா சௌந்தர்ராஜன் புதிய தொடர்!




## சாதிக்குமா மக்கள் நீதி மய்யம்?

# விஜய் ரசிகர்களை வம்புக்கு இழுத்தாரா அஜித்?

## இந்தியாவை அச்சுறுத்தும் 'டூல்கிட்' பயங்கரம்!

13 வாரத் தொடர்

‘அந்த பயிற்சி வகுப்பு முடிந்தது. அது ஒரு விசித்திரமான பயிற்சி வகுப்பு. அதற்கு பெயர் யோக வதனம்! மொத்தமாய் நூறு நாட்கள் இதன் காலம். (பிக்பாஸ் ஞாபகம் வரக் கூடும்) உண்மையில் இந்த யோக வதனம் பிக்பாஸுக்கே முன்னோடி!

துளியும் சப்தமில்லாத ஒரு வெட்டவெளி வனாந்தரப் பகுதி. அதில் ஒரு மீன் வாவி. அந்த மீன் வாவியில் அவை துள்ளும் சப்தம் நூறு மீட்டர் தூரம் கேட்கும் என்றால் அதன் அமைதி எப்படிப்பட்டதாக இருக்கும் என்பதை யூகித்துக் கொள்ளுங்கள்.

இந்த அமைதியான சூழலில் குருதேவ் ரங்கநாத் பட்டாச்சார்யாதான் நூறு நாட்களும் தன் நூறு சீடர்களுக்குப் பயிற்சி அளித்தார். இந்த நூறு பேரும் கூட உலகின் எல்லா நாடுகளையும் சேர்ந்தவர்கள். இவர்களில் விஷ்ணுவும் ஒருவன்!

பயிற்சி தலைப்பு என்ன தெரியுமா?

‘உயிர்ச் சிலிர்ப்பு’!

# உயிர்ச்



அந்த அழகான பார்ட்டி ஹாலில் அட்டகாசமாய் இருந்தாள் அர்ச்சா!

ஏனோ அர்ச்சனா என்கிற முழுப் பெயரை யாரும் சொல்வதில்லை. அர்ச்சாவில் கொஞ்சம் கூடுதல் நெருக்கத்தைக் காட்ட முடிவது ஒரு காரணமோ என்னவோ?

"என்ன அர்ச்சா... இன்னுமா உன் பாய் ஃபிரெண்ட் வரலை?"

- என்று கேட்டபடியே வந்தாள் அர்ச்சனாவின் தோழி அபிராமி. இவளையும் யாரும் முழுப்பெயர் சொல்லி அழைப்பதேயில்லை.



"என்னன்னு தெரியல அபி... போன் பண்ணா ஸ்விட்ச் ஆஃப்னே வருது. ராகவ் ஸ்விட்ச் ஆஃபே பண்ணமாட்டான்..."

"அதானே... அதிலயும் இது எவ்வளவு முக்கியமான நாள்? இன்னிக்கு நீ உங்க காதலை வேற இந்த பர்த் டே பார்ட்டிலே போட்டு உடைக்கப் போறே..."

"ஐ திங்க்... விஷ்ணு ஏதோ ஐடியா பண்ணி அதன்படி நடக்கப் போறான்னு நினைக்கிறேன்..."

"ஐடியாவா... என்ன ஐடியா?"

"தெரியல... அவ்வளவு ஏன் அவன் இப்ப இங்கயே கூட இருக்கலாம். நம்பள பார்த்துக்கிட்டும் இருக்கலாம். நான் தவிக்கிறத ரசிக்கலாம்."

"அது எப்படி ஐடியாவாகும்?"

"யோசிடி... விஷ்ணு ஒரு கிரியேடிவ் பர்சன். அவன் கையெழுத்தே ஒரு மலர்க்கொத்து மாதிரி அவ்வளவு அழகா இருக்கும். அப்படிப்பட்டவன் எல்லாரையும் போல பார்ட்டிக்கு வந்து ஹேப்பி பர்த் டே சொல்றதுல என்ன கிக் இருக்கும்?"

"அதனால?"

"ஸ்விட்ச் ஆஃப் பண்ணிட்டு அவன் ஏதோ பண்ணிக்கிட்டு இருக்கான். ஒண்ணு மட்டும்



நிச்சயம். இந்த பார்ட்டியில என்ன விஷ் பண்றத அவன் விடவே மாட்டான்."

"சரி என்ன பண்ணப் போறே?"

"அலட்சியமா இருக்கப் போறேன். அவனா நானான்னு பார்த்துடறேன்."

- அர்ச்சா என்கிற அர்ச்சனா அவளாக ஒரு யூகம் செய்து அதற்கேற்ப நடந்துகொள்ளத் தயாரானாள். அபிக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை.

பார்ட்டி ஹாலில் கூட்டம் சேரத் தொடங்கியிருந்தது. வெல்கம் ட்ரிங்க் இரண்டாவது ரவுண்டில் இருக்க, ஒரு ஐம்பது வயது இளங்கிழவி லோ ஹிப் ரவிக்கையோடு வேண்டுமென்றே துப்பட்டாவை நழுவவிட்டு குனிந்து எடுக்கும் சாக்கில் பலரை குலைநடுங்கச் செய்து கொண்டிருந்தாள்.

ஒரு மோடி வெஸ்ட் அணிந்த நரைத்த மனிதர் குளிர்ந்த பியரின் மூன்றாவது ரவுண்டில் தேவையே இல்லாமல் பார்ட்டி ஹாலை சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தார்.

விதம்விதமான மனிதர்கள்! திகிடுதம்ப்பான போக்குகள்... ஒரு முப்பது வயது யுவன் கவிழ்த்து வைக்கப்பட்ட அண்ணாநகர் ஆர்ச் போன்ற தாடியுடன் "யாருப்பா இந்த ஓட்டலை பார்ட்டிக்கு சூஸ் பண்ணது? காரை பார்க் பண்றதுக்குள்ள ட்ரவுசர் அவுந்து போச்சு," என்பதை ஆங்கிலத்தில் சொன்னபடியே நேராக வந்து பியர் கிளாசைத்தான் எடுத்தான்.

"நானும் பாடா பட்டுட்டேன்... வர்ற வழியிலயும் ஒரே டிராஃபிக்! ஆட்டோக்காரன் கோடு போட்ருவானோன்னு பயந்து பயந்து ஓட்டிக்கிட்டு வந்தேன்..." - என்று அந்த ஆர்ச் தாடிக்காரனோடு இன்னொருவன் பக்கவாத்யம் வாசிக்கத் தொடங்கிவிட்டான்.

"இனி ஓலா... உபேர்தான் பெஸ்ட்... சொந்தக் கார்லாம் படு ரிஸ்க் பந்தா..."

"எக்ஸாக்ட்லி பாஸ்... ஆமா பார்ட்டில டான்ஸ்லாம் இல்லையா? நம்ம ஆட்டோ டீலர் ஜெயில்சிங் பார்ட்டில கலிபோர்னியா கேர்ள்ஸ உரிச்சிவிட்டு இறக்கிட்டாங்க. சென்னைல அப்படி ஐட்டமா யாரும் இல்லையா?"

பார்ட்டி குறித்த பிரேரணைகள் அங்கங்கே! ஆனால் அர்ச்சாவோ விஷ்ணுவுக்குப் பிடிக்காது என்கிற ஒரு காரணத்துக்காகவே தன் உதவியாளரிடம் சொல்லி கிளுகிளுப்பான சமாச்சாரங்களை தூக்கிவிட்டாள்.

சொல்லப்போனால் அவனுக்கு இதெல்லாம் பிடிக்காது என்கிற ஒன்றே அவனை அர்ச்சா பெரிதும் மதிக்க காரணமாகவும் அமைந்துவிட்டது. ஒருமுறை அர்ச்சாவின் மார்பு லேசாக வழிந்து கொண்டிருந்தது.

## வாசகர் வாய்ஸ்!

### சைவம் அசைவம்

வாரியாரிடம் ஒருவர் கேட்டார்: "சாமி, உண்மையான சைவம் யார்? அசைவம் யார்?"

வாரியார்: "அடிபட்டு துடிக்கும் ஆட்டு குட்டியை பார்த்து கண்ணில் நீர் வந்தால் அவன் சைவம், வாயில் நீர் சுரந்தால் அவன் அசைவம்!"

– சுந்தரி காந்தி, பூந்தமல்லி

'குழந்தைக்கு தரப்போற ஒரு பால் இருக்கற பாத்திரம் மூடாம இருக்கலாமா?' - என்று அவன் வேறு மாதிரி கேட்க,

'ஐய்யய்யோ தப்பித்தவறி பல்லி விழுந்துட்டா அவ்வளவுதான்' என்று அவளும் பதில் சொல்ல,

'இப்படி இருந்தா பல்லி மட்டுமா விழும் பல பேரோட ராட்சஸ பார்வையும்ல விழும்...' என அவனும் கோபமாக சொல்ல, அதன்பின் துப்பட்டாவால் இழுத்து மூடிக் கொண்டவள், "சாரி விஷ்ணு... டெய்லரைப் பார்த்து அளவு கொடுத்து தைக்கல... டேப்ல விளம்பரத்தைப் பார்த்து அமேசான்ல ஆர்டர் பண்ணினது தப்பாப் போச்சு..." என்று சமாளித்தாள்.

"நல்ல நாள்ளயே நீங்கள்ளாம் நாழிப்பால். இப்ப இதுல எல்லாத்துக்கும் அமேசான்... இப்படி இருந்தா ஸ்லிம்மா இருக்கற நீயும் பீப்பாவா மாறிடுவே அர்ச்சனா..." என்றான்.

ஏனோ அவன் மட்டும் அவள் முழுப்பெயரைச் சொல்லியே எப்போதும் அழைத்தான். பழமையும் புதுமையும் கலந்த ஒரு டிசைனாய் விஷ்ணுவைப் பார்த்தாள் அர்ச்சனா. தினமும் யோகா செய்வதால் எப்போதும் உற்சாகத்தோடு, வியர்வையின் விநாச வாடையே இல்லாமல் வேட்டி ஜிப்பாவில் கூட நச்சென்று இருந்தான். அப்படி எல்லாம் இருக்கப்போய்தான் அர்ச்சனாவை கவரவும் முடிந்தது.

இத்தனைக்கும் அர்ச்சனா லால் அண்ட் லால் பில்டர்ஸ்ஸின் ஜே.எம்.டி.! ஆயிரம் கோடிகளுக்கு மேல் அடுக்குமாடி குடியிருப்புகளை வட இந்தியா, தென் இந்தியா என்கிற பாகுபாடு இன்றி கட்டிக் குவித்து அதில் கோடிகளை மூட்டை கட்டிய நிறுவனத்துக்கு அர்ச்சனாதான் ஒரே வாரிசு. அவள் நிறுவனத்தில் ஒரு ஆர்க்கிடெக்ட் ஆக சேர்ந்தவன் தான் விஷ்ணு.

லால் அண்ட் லாலால் கஜகர்ணமடித்தும் தமிழ் நாட்டில் பெரிதாய் சாதிக்க முடியவில்லை. திரும்பின பக்கமெல்லாம் திராவிட நெடி... அதை புதிய 2000 கரன்சியாலும் குலைக்க முடியாத ஒரு நிலையில் விஷ்ணுவின் ஒரு பிளானுக்கு அரசாங்க ஆர்டரே கிடைத்தது.

**இந்த பார்ட்டிக்கு இந்திரஜித்தும் வந்தபடி இருந்தான். ஏனோ அவன் பதற்றமாய் இருந்தான்.**

அந்த சந்தர்ப்பத்தில்தான் அர்ச்சனாவை முதலில் நேருக்கு நேர் சந்தித்தான். அந்த முதல் சந்திப்பிலேயே அர்ச்சனா அவன் வரையில் ஃப்ளாட் ஆகிவிட்டாள்.

இத்தனைக்கும் இந்திர ஜித் என்கிற மாமன் மகன் அர்ச்சனா அப்பாவான கிஷன்லாலிடம் கட்டிடத் துக்கான கார்ப்பரேஷன் அப்ரூவல் போல, 'நீதான் என் மருமகன்' என்கிற அப்ரூவலோடு அலைந்தபடி இருந்தான். விஷ்ணு வரவும் அப்ரூவல் காலாவதியாகி விட்டது.

இந்த பார்ட்டிக்கு அந்த இந்திரஜித்தும் வந்தபடி இருந்தான். ஏனோ அவன் பதற்றமாய் இருந்தான். பேரரிடம் விஸ்கி கேட்க அவன் பியர் மட்டும்தான் என்று சொல்ல, "புல்ஷிட்... எனக்கு இப்பவே விஸ்கி வேணும். கோ மேன்..." என்று விரட்டினான். அவனை எல்லாம் அர்ச்சனா சட்டையே செய்யவில்லை. விஷ்ணு எப்போது எப்படி பிரசன்ஸ் ஆவான் என்கிற தவிப்பிலேயே இருந்தாள். அவனுக்குப் பிடித்த மைசூர் சில்க் புடைவை, முழங்கை மீறிய கைவைத்த ரவிக்கை,



ஒற்றைச்சரத்தில் பட்டாணி சைசில் வெண்முத்து மாலை, அது அவள் இளமார்பின் மைய்யப் பள்ளத்தில் ஒரு லாக்கெட் டாலரோடு கிடந்தது. அனேகமாய் லாக்கெட்டில் விஷ்ணுவின் போட்டோ இருக்கக்கூடும். அவளை விஷ்ணுவிடம் இருந்து விலக்க அவள் அப்பா கிஷன்லால் என்னவெல்லாமோ செய்து பார்த்தார். (பின் என்ன... வேடிக்கையா பார்ப்பார்?)

அவர் பருப்பு அவன் வரையில் ஆயிரம் டிகிரி சென்டிகிரேடிலும் வேகவில்லை. ஒரு கட்டத்தில் அர்ச்சனா, "உங்க சொத்தே வேண்டாம்பா. இந்த உலகத்துல என் ஒரே சொத்து விஷ்ணுதான்" என்று சொல்லி நகைநட்டையெல்லாம் கழற்றி வைத்துவிட்டு விஷ்ணு இருக்கும் அபார்ட்மெண்ட்டுக்கு போய்விட்டாள். அதன்பின் ஒரு சினிமா ஹீரோ கணக்காய் அவன் அவளை கிஷன்லாலிடமே கொண்டு வந்து விட்டிருப்பான் என்பதை எழுதித்தான் சொல்ல வேண்டுமா என்ன?

அதன்பின் கிஷன்லாலும் சரண்டர்!

அப்படிப்பட்ட கிஷன்லால் தான் இப்போது இந்திரஜித் அருகில் வந்து உற்றுப் பார்த்தார். அவனும் பதிலுக்கு பார்த்தான்.

ஹிந்தியில் மாலத் தொடங்கினார்.

"என்னாச்சு?"

"ஃபினிஷ்!"

"ஆர் யூ ஷ்யூர்?"

"யார் மேல சத்யம் பண்ணா நம்புவீங்க அங்க்கிள்.."

"சரி, நம்பறேன். மாட்டிக்காம தானே பண்ணியிருக்கே?"

"கொலைய குடும்பத் தொழிலா பண்றவங்கள வெச்சி பண்ணியிருக்கேன்."

"பாடிய என்ன பண்ணே?"

"அது மகாபலிபுரத்துக்கு பத்து கிலோமீட்டர் அப்பால் உள்ள கடல்ல கல்லோட விழுந்து இந்த நிமிஷம் மீன்களுக்கு பிரியாணியாகியிருக்கும்."

"அவனைக் காணோம்னு அவன் ஃபேமிலி கம்ப்ளைண்ட் பண்ணா?"

"சான்ஸே இல்லை... அவன் இப்ப அவங்க வரைல ஃபாரீன் போய்ட்டான்.. நம்ப கம்பெனிக்கும் அவனுக்கும் கூட சம்பந்தம் இல்லை.. வேலைய ரிஸைன் பண்ணிட்டான்.. நாமளும் அவன் பாக்கிய செட்டில் பண்ணிட்டோம்."

"இதை அர்ச்சா நம்புவாளா?"

"என்கிட்ட இருக்கற வீடியோவை பார்த்தா நம்புவா.."

"வீடியோவா?"

"யெஸ்.. அப்படி ஒரு ஓரமா நின்னு இந்த செல்போன்ல இருக்கற வீடியோவை பாருங்க.."



- அவன் செல்போனைத் தர அவரும் ஓரமாய் ஒதுங்கி அதைப் பார்த்தார். அதில் விஷ்ணு கம்பீரமாய் பேசினான்.

"ஹாய் அர்ச்சனா!

"ஐ ஆம் சாரி.. உன் பிறந்தநாள் பார்ட்டில என்ன எதிர்பார்த்து ஏமாந்து போயிருப்பே. உன்னை விட்டு விலகறதுன்னு முடிவெடுத்ததாலதான் நான் வரலை. நான் இப்ப வேலையையும் ராஜினாமா செய்துட்டேன். U.S.

போய் அங்கயே செட்டில் ஆகத் தீர்மானம் பண்ணிட்டேன். என் மாமாவுக்கு செய்து கொடுத்த சத்தியப்படி என் மாமா பொண்ணு தாரிணியை கல்யாணம் பண்ணிக்கப் போறேன்.

உன்மேல எனக்கு வெறுப்போ, கோபமோ, வருத்தமோ எதுவும் இல்லை. நீ என்னை நேசிக்கவும் நானும் பதிலுக்கு உன்னை நேசிச்சது வாஸ்தவம்தான். ஆனா யோசிச்சு பார்த்தப்போ நான் ஒரு வீட்டோட மாப்பிள்ளையாத்தான் எல்லாராலயும் பாக்கப்படுவேன். நீ உன் வீட்டை விட்டு வந்து என்னோட கஷ்டப்பட தயாரா இருந்தாலும் எனக்காக உன்னை கஷ்டப்படுத்தின ஒரு பாவியாத்தான் ஆகிறேன். இன்னொருபக்கம் என் மாமா பொண்ணு தாரிணியும் கண்ணீரோட நிக்கும்போது நான் என்ன செய்யட்டும்.

"இந்தப் புது வீடு ரவுடியோடதுன்னு எதை வச்சி சொல்றீங்க?"

"வாசல்ல, 'வாழ்க, வம்புடன்!'ன்னு எழுதியிருக்கே!"

**- மருத.வடுகநாதன், வேதாரண்யம்.**

இப்ப நான் எடுத்திருக்கற முடிவு உறுதியான இறுதியான முடிவு. என் முடிவு உனக்கு நிச்சயம் பெரிய வருத்தம் தரும். ஆனா அந்த வருத்தம் போகப்போக சரியாயிடும். காலம் எல்லாத்தையும் சரி செய்யற ஒரு மகா மருந்து.

தயவு செய்து என்னை பாக்க, பேச முயற்சி செய்யாதே. நீ எவ்வளவு முயன்றாலும் முடியவும் முடியாது. இன்னும் இரண்டு நாள்ல எனக்கும் தாரிணிக்கும் U.S.லயே கல்யாணம். எங்க ஜோடிப் போட்டோ உனக்கு வாட்ஸ் அப்ல வரும். பாத்து மனசார விஷ் பண்ணு. முடியலேன்னா விட்ரு. தட்ஸ் ஆல்!"

- அந்த வீடியோ முடிந்தது. கிஷன்லால் முகத்தில் நொடியில் நிமிர்ந்த சர்க்கஸ் கூடாரம் போல ஒரு பிரமிப்பு.

பாவம் அர்ச்சனா!

பார்ட்டி ஹாலில் தவிப்பும் கோபமுமாய் புதிதாய் யார் வந்தாலும் அது விஷ்ணுவாக இருக்கக்கூடாதா என்று பார்த்த படியே இருந்தாள்! அவன் இனி வரமுடியாதவன் என்பது தெரியாமல்...

**(தொடரும்)**

13 வாரத் தொடர்

மர்மத் தொடர் 2

# பார்ட்டி கேக் வெகு அழகாய் டிசைன் செய்யப்பட்டிருந்தது!

சுற்றிலும் டின்னருக்காக என்றே வந்த கூட்டம், அர்த்தங்கள் இல்லாத அசைவுகளில் இருந்தது. அறுபதைக் கடந்துவிட்ட ஒருவருக்கு கண்களில் மட்டும் முதுமை இல்லை. வழியும் மார்புகளையும், பால்கோவா இடுப்பு மடிப்புகளையும் தேடித் தேடிப் பார்த்தபடி இருந்தார்.

அர்ச்சனா மட்டும் விஷ்ணுவுக்காகத் தவித்தபடியே இருந்தாள்.

அவளையே பார்த்துக் கொண்டிருந்த இந்திரஜித் ஒரு முடிவுக்கு வந்தவன் போல் அவளருகே சென்றவனாய், "அர்ச்சா டைம் ஆயிடிச்சு... கமான்! கம் டு கட் யுவர் கேக்..." என்றான் மிக இதமான குரலில். பதிலுக்கு அவள் 'தெரியுண்டா! போடா' என்பதுபோல் ஒரு செங்குத்துப் பார்வை பார்த்தாள்.

அவனுக்கும் அந்தப் பார்வையின் பொருள் புரிந்தது.

'இப்படி பார்த்ததற்கும் சேர்த்து உன்னை கதற வைக்கிறேன் பார்' என்றபடியே விலகியவனின் மார்புப் புறத்தில் அவனது ஆப்பிள் போன் வைப்ரேஷனில் கிச்சுகிச்சு மூட்டியது.

மெல்ல அதை எடுத்துப் பார்த்தான்.

'தேஜா' என்கிற பெயர் தெரியவும், டச் ஸ்கிரீனைத் தடவிக்கொண்டே காதைக் கொடுக்கவும் காதில் தேஜா புகத் தொடங்கினான்.

"கச்சிதமா எல்லாம் முடிஞ் சிடிச்சி பாஸ். லண்டன் வழியா நியூயார்க் போற ஃப்ளைட்ல விஷ்ணு இப்ப ட்ராவல் பண்ணி கிட்டிருக்கறதா டூப்ளிகேட் டிராவல் லாகையும் ரெடி பண்ணி உங்களுக்கு வாட்ஸ்அப் பண்ணிட்டேன்."

"குட்..."

"குட்னு ஒரு வார்த்தை மட்டும் சொன்னா எப்படி பாஸ்?"

"என்ன செய்யணும்ங்கறே?"

"இந்த விஷ்ணு லேசுப்பட்ட ஆள் இல்லை... எங்க ஆள் ஒருத்தன் மண்டையை உடைச்சிட்டான். அந்தாள் இப்ப ஆஸ்பத்திரியில ஐ.சி.யு.வில இருக்கான்."

"நீ என்ன சொல்ல வரே?"

"அவனைக் கொல்றதுக்குள்ள போதும் போதும்னு ஆயிடிச்சி பாஸ்..."

"இதை எல்லாம் எதுக்கு இப்ப என்கிட்ட சொல்றே?"

"கஷ்டப்பட்டதைச் சொல்ல லேன்னா எப்படி பாஸ்?"

"இல்ல... நீ வேற எதுக்கோ அடி போடுறே?"

"புரிஞ்சிக்கிட்டீங்களே... நான் சில வீடியோக்களை அனுப்பியிருக்கேன். அதையும் கொஞ்சம் பார்த்துடுங்க."

"என்ன வீடியோ... அதை நான் எதுக்குப் பார்க்கணும்?"

"டென்ஷனாகாதீங்கோ... ஆயிரம் கோடிக்கு மேல சொத்து உள்ள பொண்ண கட்டப் போறீங்கோ. இன்னும் பல ஆயிரம் கோடிங்க சம்பாதிக்கவும் போறீங்கோ... நானும் உங்களால கொஞ்சம் சம்பாதிக்க ஆசைப்படறேன் பாஸ்...!"

"தேஜா... உனக்குப் பேசின பணத்தை உன் விருப்பப்படி கேஷாவே கொடுத்தாச்சு. ஆனா, நீ மேற் கொண்டு ஆசைப்படுற மாதிரி





தெரியுது..."

"எக்ஸாக்ட்லி பாஸ்! அடிபட்டு ஆஸ்பத்திரியில இருக்கற என் ஆளு பொழைக்கறது கஷ்டம்னு டாக்டருங்க சொல்லிட்டாங்க. அந்த குடும்பத்துக்குப் பணம் கொடுக்க வேண்டாமா? நாங்க கூலிப் படைதான். ஆனா கொலை, எங்க

வரைல ஒரு புராஜெக்ட்! அது ஒரு அசைன்மென்ட்..! இப்படி எப்படி வேணா சொல்லலாம். அதை நாங்க தொழில் சுத்தமா செய்யறதால அதுல இன்னும் பல சுத்தங்களும் இருக்கு. மாசமானா டாண்ணு சம்பளம், அப்புறம் டெய்லி தண்ணி, பொம்பள... சிலர் வரைல பவுடர்! தொழில் பண்ணும்போது செத்துட்டா... ஃபேமிலிக்கு நஷ்ட ஈடு இப்படி எங்களுக்குள்ள நிறைய இருக்கு பாஸ்..."

"புல்ஷிட்... இப்ப நீ எவ்வளவு கேக்கறே?"

"இன்னொரு கோடிதான்... வேறென்ன?"

"மொய்னா 101, 501னுதானே வைப்பாங்க.... இந்தாளு 108 ரூபாய் மொய் வச்சிருக்கிறானே?"

"அவர் ஆம்புலன்ஸ் டிரைவராம்!"

**- எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.**

"வாட்?"

"வாயை எல்லாம் பிளக்காதீங்க. முதல்ல வீடியோவை பாருங்க. நாங்க எவ்வளவு கஷ்டப்பட்டு கொலை செய்தோம்னு தெரியும்! எவ்வளவோ கொலை செய்திருக்கோம். ஆனா, இந்தக் கொலை எங்களுக்கு ஒரு பாடம்... பையனை செத்துட்டான்னு நினைச்சு ஒரு கல்ல கட்டி கடல்ல தூக்கிப் போட்டோம்!

ஆனா பாருங்க... கல்ல அவுத்துகிட்டு ஸ்விம் பண்ணி எங்க போட்ட பிடிச்சுக்கிட்டே கரைக்கும் வந்துட்டான். நல்லவேளை கரைல நின்னுக்கிட்டிருந்த எங்காளுங்க பாத்துட்டாங்க... இல்லே நாங்க கூட்டமா தொலைஞ்சிருப்போம். எங்க துப்பாக்கிய எடுத்து அவன் எங்களையே சுட்டதுல எங்க ஆளுங்க பல பேருக்குக் காயம். கடைசில அவனை நெத்தில சுட்டு, நெருப்பு வெச்சு எரிச்சோம். சாம்பல கடல்ல கரைச்சிட்டு அப்புறம்தான் திரும்பினோம்.

செத்தவன் சாதாரணமான ஆள் இல்ல பாஸ். வில் பவர் அவனுக்கு ஜாஸ்தி! அவனை கட்டி வெச்சி அடிச்சப்போ கத்தவேயில்லை. அவன் பார்த்த விதமும் ஒரு மாதிரி இருந்துச்சி. அவனை நான் அடிக்கப் போனப்பல்லாம் கண்ணாலயே தடுத்தான். அப்படி ஒரு பார்வையை நான் எங்கேயும் பார்த்ததேயில்லை..."

"தேஜா... என்ன கதையா அளக்கறே? இங்க இப்ப பார்ட்டி நடந்துக்கிட்டிருக்கு. உன் கதைய கேக்கல்லாம் எனக்கு நேரமில்ல, விருப்பமில்ல..."

"இப்படி எல்லாம் நீங்க பேசினா

உங்களுக்கும் அப்புறம் டேட் குறிச்சிடுவோம் பாஸ். மரியாதையா வீடியோவைப் பாருங்க."

மறுபுறத்தில் மிரட்டலோடு தேஜா முடித்துக் கொண்டான். இந்திரஜித் காதோரம் வியர்வைப் புழுவின் நெளிசல் கைகளிலும் ஒரு சின்ன நடுக்கம். சில நொடிகள் வரை கனத்த மௌனமும்.

பின்னர் தயக்கத்தோடு மெசஞ்ஜர் வீடியோவை ஓபன் செய்யவும் விஷ்ணு தொடர்பான காட்சிகள் ஓடத் தொடங்கியது.

'கட்டி வைத்து அடிக்கிறார்கள். விஷ்ணு அசராமல் வெறித்துப் பார்க்கிறான்! கழுத்தை நெரித்து கொன்றுபின் கல்லைக் கட்டி கடலுக்குள் போட்டிலிருந்து உருட்டி விடுகிறார்கள்.' இது ஒரு வீடியோ!

இன்னொரு வீடியோவில் அவன் நெற்றிப்பொட்டில் துப்பாக்கியை வைத்து சுடவும் அவன் தலை துவண்டுபோய் தொங்குகிறது. வேகமாய் படுக்க வைத்து மேலே டீசலை ஊற்றி தீ வைத்துக் கொளுத்துகிறார்கள். பின் சாம்பலை அள்ளி கடல் அலைகளில் கரைக்கிறார்கள். எரித்த இடத்தின் மேலும் மணலை அள்ளிப் போட்டு மூடுகிறார்கள்.

எங்கேயும் எந்தத் தடயமும் இல்லாதபடி அவ்வளவு தொழில்



சுத்தம்! இது ஒரு வீடியோ!

மூன்றாவது வீடியோவில் தேஜாவின் ஆள் ஆஸ்பத்திரியில் தலையில் பெரிய கட்டோடு கிடக்கிறான். அருகில் ஒரு மானிட்டரில் ஒளிக்கோடுகள் ஏற்ற இறக்கமாய் ஓடியபடியே இருக்கின்றன!

தேஜா பொய் சொல்லவில்லை! இது அநாவசிய மிரட்டலும் இல்லை. இப்படி வீடியோ எடுத்து கஸ்டமர்களுக்குக் காட்டும்போது அவர்களுக்கும் ஒரு நம்பிக்கை வருகிறது.

இந்திரஜித்தும் அது புரிந்தது போல் அங்கிருந்து நகர்ந்து பார்ட்டி ஹாலின் மையத்துக்குச் சென்றான்.

அர்ச்சனா அவளது தோழியால் கேக் அருகே இழுத்து வந்து நிறுத்தப்பட்டிருந்தாள். அவள் வற்புறுத்தலில் அரை மனதாய் கட் பண்ணவும் தொடங்கிவிட்டாள்.

எல்லோரிடமும் க்ளாப்ஸ்! கேக் வெட்டி முடித்த அவள் பார்வை மட்டும் துழாவலில்... 'அவன் வரமாட்டான் பேபி... வரவே மாட்டன்! நான்தான் இனி உனக்கு எல்லாம்... நீ என் வலையில் விழுந்தே தீரவேண்டும் பேபி...' - என்று மனதில் சொல்லிக் கொண்டே அர்ச்சனா அருகில் சென்றவன், அவள் காதருகே சென்று, "அர்ச்சனா... நீ விஷ்ணுவைக் கல்யாணம் பண்ணிக்கப் போற விஷயத்தை இப்ப சொல்றதா இருந்தா சொல்... ஆமா ஏன் விஷ்ணு வரலை..?" - என்று ஒன்றுமே தெரியாதவன் போல கேட்டான். அவள் பதிலுக்கு கலக்கமாய் அவனைப் பார்த்தாள்.

"ஐ திங்க் அவன் யு.எஸ். போற ஃப்ளைட்டுல ஏறினதா ஏர்போர்ட் போயிருந்த நம்ப மேனேஜர் ராம்சிங் சொன்னார். அவருக்கு அவன்தானான்னு கொஞ்சம் டவுட்டும்கூட..."

- இந்திரஜித் அடுத்து போட்ட பிட் நன்றாகவே வேலை செய்யத் தொடங்கியது.

"நோ... இருக்காது... எனக்கு தெரியாம விஷ்ணு எங்கேயும் போகமாட்டான்..." என்றாள் மிக வேகமாய்...

"அப்ப ஏன் பார்ட்டிக்கு வரலை... வந்திருந்தா இங்கயே இப்பவே எல்லாருக்கும் இன்ட்ரொடியூஸ் பண்ணியிருக்கலாம்ல? அதுதானே மாமாவோட பிளான்..."

"அந்த யோகவதனப் பயிற்சி வகுப்பில் உயிர்ச் சிலிர்ப்பு என்றால் என்ன என்று ஒரு இன்ட்ரோவும் கொடுத்தார் குருதேவ் ரங்கநாத் பட்டாச்சார்யா.

"உயிர்னா என்ன? ஒரு உடம்புக்குள்ள அது எங்க இருக்கு? எப்படி இருக்கு? அது எப்படி ஒரு உடம்பை வியாபிக்கும் - பின் அது எப்படி ஒரு உடம்பை விட்டு விலகும்?

இந்தக் கேள்விகளை இந்த உலகத்துல எந்த விஞ்ஞானிகளும் பெருசா கேட்டு ஆராய்ச்சிகள் செய்யல. டாக்டர்கள் வரைல மூச்சு நின்னு போறதும், உடல் சூடு குளிர்ந்து போவதும்தான் உயிர் பிரிவு. அடுத்து மூளை இயங்காமல் போவதும் அவர்கள் வரையில் மரணம்.

ஆனா நம்ப ரிஷிகள் மற்றும் சித்தர்கள் இந்த ஆராய்ச்சியில பல உயரங்களைத் தொட்டாங்க. அதுல கோரக்கர்ங்கறவர் இதைப் பற்றி ஒரு பாட்டே பாடியிருக்கார்!

'காரணமாம் பரம்பொருளே கனக வாசல்'னு தொடங்குற பாடல் நம் உடம்புல உயிர் எங்க எப்படி இருந்து செயல்படுதுங்கறத தெளிவா சொல்லுது. யஜுர் வேதத்துல ஜாபால உபநிஷதமும் ரொம்பத் தெளிவா சொல்லுது.

'அதனுடைய இடம் எது என்றால் புருவங்களும், நாசியும் கூடுமிடம் எதுவோ அதுவே!' என்று..."

-அந்தக் கேள்விக்குப் பதிலா அவள் தன் ஆன்ட்ராய்டு போனின் வழி அவனைப் பிடிக்க முயற்சித்தபோது, அவளுக்கு வாட்ஸ் அப்பில் ஒரு வீடியோ வந்து விழுந்த சமிக்ஞை.

அவன் செல்போனில் இருந்து வந்திருந்த அந்த வீடியோவை சற்று விலகிச் சென்று ஓபன் செய்து பார்த்தாள். விஷ்ணுதான் பேசினான். அர்ச்சனாவின் அப்பா கிஷன் லாலிடம் இந்திரஜித் காட்டிய அதே வீடியோ! விஷ்ணுவைக் கொல்லும் முன் அவனிடமிருந்து கைப்பற்றப் பட்ட பொருட்களில் இந்திரஜித்துக்கு மிகத் தேவைப்பட்ட ஒரு ஐட்டமே இதுதான்!

வீடியோவும் ஓடத் தொடங்கியது.

"ஹாய் அர்ச்சனா!

ஐ ஆம் சாரி... உன் பிறந்தநாள் பார்ட்டில என்னை எதிர்பார்த்து ஏமாந்து போயிருப்பே. உன்னை விட்டு விலகறதுன்னு முடிவெடுத்ததாலதான் நான் வரலை. நான் இப்ப வேலையையும் ரிசைன் பண்ணிட்டேன். யு.எஸ். போய் அங்கேயே செட்டில் ஆகத் தீர்மானம் பண்ணிட்டேன். என் மாமாவுக்கு செய்து கொடுத்த சத்தியப்படி என் மாமா பொண்ணு தாரிணியை கல்யாணம் பண்ணிக்க போறேன்.

உன் மேல எனக்கு வெறுப்போ, கோபமோ, வருத்தமோ எதுவும் இல்லை. நீ என்னை நேசிக்கவும் நானும் பதிலுக்கு உன்னை நேசிச்சது வாஸ்தவம்தான். ஆனா யோசிச்சுப் பார்த்தப்போ நான் ஒரு வீட்டோட மாப்ளையா தான் எல்லோராலயும் பார்க்கப்படுவேன். நீ உன் வீட்டை விட்டு வந்து என்னோட கஷ்டப்பட தயாரா இருந்தாலும், எனக்காக உன்னை கஷ்டப்படுத்தின ஒரு பாவியாத்தான் நான் ஆகறேன். இன்னொரு பக்கம் என் மாமா பொண்ணு தாரிணியும் கண்ணீரோடு நிக்கும்போது நான் என்ன செய்யட்டும்?

இப்ப நான் எடுத்திருக்கிற முடிவு உறுதியான, இறுதியான முடிவு. என் முடிவு நிச்சயம் உனக்கு பெரிய வருத்தம் தரும். ஆனா அந்த வருத்தம் போகப்போக சரியாயிடும். காலம் எல்லாத்தையும் சரி செய்யற ஒரு மகா மருந்து.

"இதுவரை ஒருமுறையும் தேர்தலிலும், ஏன் கருத்துக்கணிப்பிலும் கூட ஜெயிக்கவே ஜெயிக்காத பரிதாபத்துக்குரிய தலைவர் அவர்களே..!"

**- ஐ. ஈனோஸ், சென்னை.**

தயவுசெய்து என்னை பார்க்க, பேச முயற்சி செய்யாதே. நீ எவ்வளவு முயன்றாலும் அது முடியவும் முடியாது. இன்னும் இரண்டு நாள்ள எனக்கும் தாரிணிக்கும் யு.எஸ்.லயே கல்யாணம். எங்க ஜோடிப் போட்டோ உனக்கு வாட்ஸ்அப்புல வரும். பாத்து மனசார விஷ் பண்ணு. முடியாதுன்னா விட்ரு! தட்ஸ் ஆல்!"

- அந்த வீடியோ முடிந்தது. அர்ச்சனா ஸ்தம்பித்துப் போயிருந்தாள். அதைக் கூர்ந்து கவனித்தபடியே இந்திரஜித், "அச்சா... என்னாச்சு?" என்று அவள் தோள் மேல் மெல்ல கை வைத்தான். அவள் அதை மெல்லத் தள்ளி விட்டாள்.



"யார் போன்ல... எனிதிங் சீரியஸ்?" - அவன் தெரிந்தே கேட்டான். அவளோ மெல்ல சுதாரித்தவளாக அவன் போனைத் தொடர்பு கொள்ள முயன்றாள். தொடர்பு எல்லைக்கு அப்பால் என்றே ஒலித்தது.

அவள் கண்களிரண்டும் சூழலை மீறி அழத் தொடங்கியது. தோழி அபிராமி என்கிற அபி யாரும் பார்த்திராதபடி அருகில் உள்ள அறைக்கு அழைத்துச் சென்று, "என்னாச்சு அர்ச்சனா?" என்றிட, அர்ச்சனாவும் வீடியோவை அவளுக்குக் காட்ட, அபியிடமும் ஒரு ஆழமான ஷாக்!

இன்னொரு தனியறை!

கிஷன்லாலிடம் தேஜா அனுப்பிய வீடியோக்களை காட்டிக் கொண்டிருந்தான் இந்திரஜித். கிஷன்லால் சற்றே உறைந்தவராக "இதையெல்லாமாடா வீடியோ எடுப்பாங்க. யார் கைலயாவது சிக்குனா என்னாகறது?" என்று மெல்லிய குரலில் கேட்டார்.

"இது அவங்க ஸ்டைல் அங்கிள். பயப்படாதீங்க. பணம் கொடுத்துட்டா எரேஸ் பண்ணி டெலீட் பண்ணிடுவாங்க."

"அதான் பணம் கொடுத்தாச்சே?"

"ஆனா, இன்னொரு கோடி கேக்கறான். அடிபட்டு ஆஸ்பத்திரிலே இருக்கறவன் குடும்பத்துக்கு உதவி செய்யணுமாம்."

"நோ... போனா போகுதுன்னு

கொடுத்தா, அப்புறம் கேட்டுக் கிட்டே இருப்பாங்க..."

"கொடுக்கலேன்னா என்னயவே கொன்னுடுவேன்னு சொல்றான் அங்கிள்..."

"சும்மா மிரட்றான். பயந்தா அவ்ளோதான்... அப்புறம் மிரட்டிக்கிட்டே இருப்பாங்க."

"இல்ல அங்கிள்... கொடுத் துடலாம்."

"நீ சும்மா இரு... நான் பேசறேன் அவன்கிட்ட! பணம் இங்க மேட்டர் கிடையாது. இதெல்லாம் ஒன்டைம் மேட்டர்தான்.. நாம கொஞ்சம் வளைஞ்சு கொடுத்தாக்கூட அவ்வளவுதான். நம்பள அப்படியே டோட்டலா முழுங்கிடுவாங்க..."

- என்ற கிஷன்லால் தேஜாவை யும் பிடித்தார்.

"என்ன தேஜா... பணம் கேட்டி யாமே?"

"ஹாங்ஜீ! ரெடியாயிடிச்சா, எங்க வந்து வாங்கிக்கலாம்? நானே இப்பல்லாம் டைரக்டா இறங்கிடறேன். எப்பவும் போல கேஷாவே கொடுத்துடுங்க..."

"என்ன விளையாட்றியா...?"

"வேண்டாம்ஜி.. இந்த கேஸ்ல நான் ரொம்ப கஷ்டப்பட்டுட்டேன். கொஞ்சம் அசந்திருந்தா என் கேங்கே காலியாகியிருக்கும்."



"பிளாக் பிசினஸ் எப்பவும் எல்லாமே ஒன்டைம்தான்! ஒரு துப்பாக்கி, ஒரு தோட்டா ஒரே குறி... நீ என்ன சில்ரத்தனமா பிஹேவ் பண்றே?"

"வேண்டாம்ஜி... வார்த்தைய விடாதீங்க..."

"நீதான் விட வைக்கிறே. கேட்ட பணத்தைக் கொடுத் துட்டேன். அதோட எல்லாம் முடிஞ்சிடிச்சி. பேரைக் கெடுத் துக்காதே.. வை போனை!"

- அதட்டலாய்பேசிவிட்டு போனை வைத்தவர் இந்திரஜித் பக்கம் திரும்பி, "எல்லாத்துலயும் உனக்கு அவசரம்," என்றார் கோப மாய். அப்போது இந்திர ஜித்துக்கு தேஜாவிடம் இருந்து அழைப்பு. உடனேயே ஸ்விட்ச் ஆஃப் செய்தான்!

அடுத்த நொடியே கிஷன்லால் போனில் ஒரு மெஸேஜ் சிணுங்கல்.

அதில் '24 மணி நேரத்தில் பணம் வரவில்லை என்றால் நீ பிணமாவது உறுதி' என்கிற செய்தி!

**(தொடரும்)**

# ரிட்டயர்மென்ட்!

முப்பது வருடத்துக்கும் மேல் அரசு அதிகாரியாகப் பணியாற்றி ஓய்வுபெறும் பரசுராமனின் பிரிவு உபசார விழாவில் அனைவரும் பரசுராமனை பாராட்டிப் பேசினர்.

பரசுராமனுக்கு நேர் கீழ் இயங்கும் உதவி அதிகாரி பேசுகையில், "வேலையின் நுணுக்கங்களையும், நெருக்கடியான சந்தர்ப்பங்களில் நிதானமாகவும், திடமாகவும் இயங்க ஒவ்வொருவரும் பரசுராமன் சாரிடம் கற்றுக் கொள்ள வேண்டும்" என்றார்.

ஹெட் கிளார்க் சுந்தரம் பாராட்டி பேசும்போது, "எனது முப்பது வருட அனுபவத்தில் இந்த மாதிரி திறமையான அதிகாரியைப் பார்த்ததே இல்லை!" என்று புகழ்ந்தார். "வேலையில் கண்டிப்பாகவும், கறாராகவும் இருந்தாலும் தனக்கு கீழ் வேலை செய்த ஊழியர்களை மனிதாபிமானத்துடன் நடத்தத் தவறியதில்லை" என்றார்.

கடைசியாகப் பரசுராமனின் மேல் அதிகாரி பேசினார், "பரசுராமனைப் போன்ற திறமையான அதிகாரி ஓய்வு பெறுவது எனது வலது கை உடைந்த மாதிரிதான். இதை ஏற்றுத்தான் ஆகவேண்டும். பணி ஓய்வுபெறும் பரசுராமன் நீண்ட ஆயுளுடனும் ஆரோக்கியத்துடனும் தன் குடும்பத்தினருடன் சந்தோஷமாக வாழ அனைவரும் வாழ்த்துவோம்."





அதேசமயம் வீட்டில்...

மகள் மாலதியிடம் புலம்பித் தள்ளினாள் அம்மா வைதேகி. "ஐயோ! வேலைக்குப் போகும் போதே தினமும் படுத்துவார். இனி இருபத்தினாலு மணி நேரமும் வீட்லயே இருந்தார்னா என்ன ஆகப்போகுதோ!"

■ கிணத்துக்கடவு ரவி.

13 வாரத் தொடர்

இந்திரா சௌந்தர்ராஜன்

# உயிர்ச் சிலிர்ப்பு

‘நீ பிணமாவது உறுதி!' என்கிற அந்தச் செய்தி கிஷன்லாலை அச்சப்படுத்தாமல் கோபத்தைத்தான் கிளறிவிட்டது.

"அரே சைத்தான் கி பேட்டா..! எனக்கு நீ செக் வைக்கிறியா? நீ லோக்கல்.. எனக்கு இன்டர்நேஷனல் லெவல்ல தாதாக்களை தெரியும். அவங்க மூலமா உனக்கு நான் வைக்கறேன் பார் ஆப்பு.." என்று கடுகடுத்தார்.

இடையில் இந்திரஜித் அந்த செல்போன் மெஸேஜை எட்டிப் பார்த்தான். அவரே அவன் கைக்கே செல்போனை தந்தவர் "பாரு.. உன் ஆளோட வேலையை.. என்ன கொன்னுடுவானாம்! மிரட்டிப் பாக்கறான். இவன இனி சும்மா விடக்கூடாது.." என்று மேலும் சிவந்தார்.

"மைகாட்... அங்கிள் நீங்க இதுக்காக ஃபீல் பண்ணாதீங்க. நானே இதை சமாளிச்சிக்கறேன். ஐ ஆம் வெரி சாரி.."

என்று அந்த மெஸேஜைப் பார்த்து படபடப்பானான்.

"நோ... நீ அவசரப்படறே இந்திரஜித். நீ இந்த விஷயத்துல தேஜாகிட்ட போயிருக்கக்கூடாது. இவன் லுச்சா பார்ட்டி. சில்ர!"

"சாரி அங்கிள்... வெரி சாரி. தேஜாவை நான் சமாளிச்சிக்கறேன்."

"அவன் கேட்ட பணத்தைக் கொடுத்தா..?"

"வேற வழி..?"

"நோ... இவன் மாதிரி ஆளுங்ககிட்ட நாம மடங்கிப் போகவே கூடாது. நீ போ... போய் உன் வேலைய பார். இவன நான் பாத்துக்கறேன்..."

"அங்கிள் வெரி சாரி அங்கிள்..."

"இதோ பார்... தேஜா விஷயத்த நான் பாத்துக்கறேன். நீ இனி கான்சன்ட்ரேட் பண்ண வேண்டிய தெல்லாம் அர்ச்சா கிட்டதான்."

"ஷ்யூர் அங்கிள்... அதுக்குத் தானே அந்த விஷ்ணுவை தீர்த்தே கட்டினேன்..."

"அவனை உலகத்தைவிட்டு அனுப்பறது நமக்கு சுலபம்... ஆனா அவனை அர்ச்சா மனசை விட்டு அனுப்பறது சுலபம் இல்ல! அப்புறம் அவன் இருந்த இடத்துல நீ போய் உட்காரணும்... அது இன்னும் கஷ்டமான காரியம். ஏன்னா அர்ச்சனா அந்த விஷ்ணுவை அவ்வளவு ஆழமா லவ் பண்றா..!"

"அதே அளவு ஆழத்துக்கு நானும் போய் காட்றேன் அங்கிள்..."

"அதுக்கு நீ அந்த விஷ்ணுவா மாறணும்... ஈஸ் இட் பாசிபிள்..?"

"பாசிபிள் அங்கிள்... கொயட் பாசிபிள்!"

"சும்மா வார்த்தைல சொன்னா போதாது இந்திரஜித். உன் ஸ்டார்ட்டிங்கே சரியில்லை. தேஜாங்கறவன்கிட்ட போய் மாட்டிக்கிட்டிருக்கே. நீ எப்படி என் மகள் மனசுல போய் உட்காருவே?

உனக்கு விஷ்ணுவைப் பற்றி சரியா தெரியல. ஆனா ஐ நோ வெரி வெல்... அவன் என்கிட்டதானே வேலை பார்த்தான். வேலைல அவன் எவ்வளவு ஸ்மார்ட் தெரியுமா?"

"ஐ நோ... ஐ நோ... நம்பளால நினைச்சுகூட பாக்கமுடியாத பல





"புலவர் அப்படி என்ன கேட்டார், மன்னர் கடுப்பாகிவிட்டாரே?"

"பொற்காசுக்குப் பதிலா ஒரு லிட்டர் பெட்ரோல்!"

– நாகியார், கோவை.

கான்ட்ராக்ட்டுகளை அவன் வாங்கிட்டான்! இன்ஃபாக்ட் அவன் ஒரு ஜீனியஸ்தான்... நானும் மறுக்கல..."

"அப்படி ஒரு ஜீனியஸா உன்னை என்னால கற்பனைகூட செய்து பார்க்க முடியல இந்திரஜித். அவசரம் ஆத்திரம் அப்புறம் பயம்னு உன்கிட்ட நிறைய மைனஸ் இருக்கு."

"அங்கிள்... நீங்க பரலோகம் போய்ட்ட அந்த விஷ்ணுவை பாராட்டுறீங்களா, இல்லை என்னை திட்றீங்களா?"

"நான் உன்னை மோடிவேட் பண்றேன். நீ இப்ப புலி வாலைப் பிடிச்சுட்டே! ஒண்ணு நீ சாகணும், இல்ல புலி சாகணும். எனக்கென்னமோ நீ ஜெயிப்பேன்னே தோண மாட்டேங்குது..!"

"நோ... அப்படி எல்லாம் அவசரப்பட்டு சொல்லிடாதீங்க. நான் ஜெயிப்பேன். அர்ச்சனா என்னை விரும்பற மாதிரி நடந்தும் காட்டுவேன். அவ கழுத்துல தாலிய கட்டுவேன்..."

"செய்து காட்டிட்டு பேசு... நீ ஜெயிச்சா அது நான் ஜெயிச்ச மாதிரி..."

"நாம ஜெயிக்கறோம் அங்கிள்..."

- இந்திரஜித் கட்டை

"தன் ஆட்காட்டி விரலால் தன் நெற்றிப் பொட்டைத் தொட்டுக் கொண்டு குருதேவ் ரங்கநாத பட்டாச்சார்யா ஜாபால உபநிஷதக் கருத்தைச் சொன்னதை விஷ்ணு கூர்மையாகக் கேட்டபடி இருந்தான். அவர் தொடர்ந்தார்.

'எண்சாண் உடம்புக்கும் சிரசே பிரதானம்! இதனுள்தான் பிரம்ம தந்திரம் உள்ளது. கூடுதலாக எட்டு நிலைகளும் உள்ளன.

1. வெளிப்பாழ், 2. ஒளிப்பாழ், 3. வெளி யொளிப்பாழ், 4. நீர்க்குணத்தின்பாழ், 5. அன்மைய கோசம், 6. பிராணமயகோசம், 7. மனோமயகோசம் (இதுவே சூக்கும சரீரம் உள்ள இடம்), 8. விஞ்ஞான மயகோசம் (இதுவே உயிர் இருக்குமிடம்).

இந்த எட்டு நிலைக்கு மேலே கபால ஓட்டின் உச்சிக்குழி அருகில்தான் ஆனந்தமயகோசம் என்கிற அமிர்தம் ஊறுமிடம் இருக்கிறது. அதை ஒட்டி சூக்கும சரீரம் உள்ள மனோமய கோசம் உள்ளது.

இந்த சூக்கும சரீரமே பகுத்தறிவு என்கிற ஆறாவது அறிவாகும். இந்த சூக்கும சரீர தோற்றம் எப்படி இருக்கும் என்பதை கைவல்ய நவநீதம் கூறுகிறது.

இது நம் ஸ்தூல உடலைப் போல, இந்த உடலை கண்ணாடி வழி பார்க்கும்போது கண்ணாடிக்குள் தெரியும் பிம்பம் போன்றது. ஞானத்துவம் செய்வோர் கண்முன்னே அவர்களின் சூக்கும சரீரம் நின்று பேசும்! இதனுள் ஆத்மாவை புகுத்தி ஸ்தூல சரீரத்தை கைவிடுவதைத்தான் 'கூடு பாய்தல்' என்கிறோம்.'' - ரங்கநாத பட்டாச்சார்யா சொல்லி முடித்திட விஷ்ணு அவர் முன் எழுந்து நின்று, "அப்படி கூடு விட்டு கூடு பாய்ந்து காட்ட முடியுமா குருவே..." என்று கேட்டான்!

விரலைக் காட்டி நெஞ்சை நிமிர்த்தினான். அதை அந்த பல ஆயிரம் கோடிகளுக்கான அதிபர் வெகுவாய் ரசித்தார்.

"அப்ப தேஜா விஷயத்தை.." - அவன் மெல்ல இழுத்தான்.

"அது இனிமே என் விஷயம். அவனை மறந்துடு. உன் கவனமெல்லாம் அர்ச்சனா மேலதான் இனி இருக்கணும்..." என்றார்.

**செ**ன்னை வானம் முழுக்க கருமேகப் பந்தல்! பார்பர் ஷாப் ஸ்ப்ரேயர் போல சன்ன மழைச் சாரல்..! அதில் நனைந்தபடியே தோட்டத்து ஊஞ்சலில் அமர்ந்திருந்தாள் அர்ச்சனா! அவள் பார்க்க தனது ஆடி காரில் அவள் முன் உள்ள டைல்ஸ் பதித்த வளைவுப் பாதையில் வந்து இறங்கிய இந்திரஜித் வழக்கமான குர்தா ஜிப்பா என்று இல்லாமல் லைட் க்ரே கலரில் பேன்ட்டும், நல்ல ஒயிட் கலரில் முழுக்கை சட்டையும் அணிந்து டக் இன் செய்திருந்தவனாக அவள் முன் வந்தான்.

சாரல் மழையில் உடல் நனைந்த நிலையில் அது வாளிப்பான அவள் உடலோடு ஒட்டியிருக்கும் நிலையில் இந்திரஜித் ஆண்மைக்குள் அவள் சற்று தீ வைத்தாள். அவன் அது பற்றி கொழுந்து விடாதபடி தன்னை அடக்கிக் கொண்டவனாய், "சாரி அர்ச்சனா... விஷ்ணு இப்ப இந்த இண்டியாவுலயே இல்ல.. இன்ஃபாக்ட் இந்த பூமியிலயே இல்லை!" என்று ஆரம்பித்தான்.

அர்ச்சனா சட்டென்று நிமிர்ந்து அவனைப் பார்த்த விதத்தில் அந்த ஈரத்திலும் ஒரு அனல்.

"ஐ மீன்... அவன் இப்ப நியூயார்க் போற ஃப்ளைட்ல வானத்துல இருக்கான். மே பீ இன்னும் ஒரு அரைமணி நேரத்துல அங்க லேண்ட் ஆயிடுவான். இதோ அவன் நியூயார்க் ஃப்ளைட்ல போனதுக்கான ஃப்ளைட் பேசஞ்சர்ஸ் லிஸ்ட்!"

- அவன் அவள் முன் தன் பேன்ட் பாக்கெட்டில் இருந்து ஒரு கவரை எடுத்து நீட்டினான். அப்பட்டமான ஏர் இண்டியா முத்திரை பதிக்கப்பட்ட பிரிண்டட் கவர்! உள்ளே மடங்கியிருக்கும் காகிதத்துக்குள் பல பெயர்களில் அவன் பெயரும் ஒரு பெயராய்...

**"நோ... இப்படி எல்லாம் பேசாதே! என் விஷ்ணு எங்க, நீ எங்க?" - என மிக வேகமாய் வார்த்தைகளை வெடித்தாள்.**

அந்த கவரை சாரல் மழை நனைக்கவும் அதை மறைத்துக் கொண்டு, "ப்ளீஸ் அர்ச்சனா... கொஞ்சம் உள்ள வா.. உன்கிட்ட நான் நிறைய பேசணும்," என்றான்.

அவள் வெறித்தபடியே இருந்தாள்.

"ப்ளீஸ்.."

"நீ போ இந்திரஜித்! இப்ப எனக்கு இப்படி இருக்கத்தான் பிடிச்சிருக்கு."

"உடம்புக்கு வந்துடும் அர்ச்சனா.."

"வரட்டும்... மனசு செத்துப் போச்சு, உடம்பும் செத்துப் போகட்டும்."

"அப்ப சரி.. நானும் இங்க உன் கூடவே இருக்கேன்.. உனக்கு நடக்கற எல்லாம் எனக்கும் நடக்கட்டும்!"



அவன் அப்படிச் சொல்லவும் அவள் உடனே அவனை அதிர்வோடு பார்த்தாள். இமை முடிகள் மேல் நீர்ச் சொட்டு ஒன்று தேங்கி மளுக்கென்று உதிர்ந்தது.

"என்ன அப்படி பாக்கிறே? நீ அவனுக்காக உருகற மாதிரி நான் உனக்காக உருகறேன்."

"நோ... இப்படி எல்லாம் பேசாதே! என் விஷ்ணு எங்க, நீ எங்க?" - என மிக வேகமாய் வார்த்தைகளை வெடித்தாள்.

"உண்மைதான்.. உன் விஷ்ணு இப்ப எங்கியோதான் போய்ட்டான். நாங்கல்லாம் ஆரம்பத்துல எதிர்த்தோம். அப்புறம் வழிவிட்டு ஒதுங்கிட்டோம். ஆனா அவன் உனக்கு இப்படி ஒரு துரோகம் செய்வான்னு நான் கொஞ்சம்கூட எதிர்பார்க்கல.

கிஷன்லால் மாப்ளைங்கறது எவ்வளவு பெரிய கௌரவம்? ஆனா அதை ஒரு அடிமைத்தனம்னு கொச்சைப்படுத்திட்டானே அந்த ஃபூல்!"

"என் எதிரில என் விஷ்ணுவை திட்டாதே! என் விஷ்ணுவால என்னை வெறுக்கவே முடியாது. என்னாலயும் விஷ்ணுவை வெறுக்க முடியாது."

"அர்ச்சனா இது 2021! நீ ஒரு மாடர்ன் கேர்ள்.. இப்படியெல்லாம் பேசாதே. உனக்கு இப்ப அவன் மேல

கோபம் வரணும். சாதாரண கோபம் இல்ல- கொலைவெறிக் கோபம் வரணும். ஏன் வரலைன்னுதான் தெரியல எனக்கு?"

"லுக்... நான் இப்பவும் என் விஷ்ணுவை நம்பறேன். அவன்கிட்ட நான் பேசினா போதும். எல்லாம் க்ளியர் ஆயிடும்."

"இனி பேச என்ன இருக்கு? அதுதான் அவனே பேசி ஒரு வீடியோவே அனுப்பிட்டானே?"

"இல்ல... அது மார்ஃபிங் வீடியோ..! குரலும் யாரோ மிமிக்ரி ஆர்ட்டிஸ்ட் குரல்!"



அவள் அப்படிச் சொல்லவும் அவனுக்கு சுருக்கென்றது. அதுதானே உண்மையும் கூட! அதை அர்ச்சனா எப்படி கண்டுபிடித்தாள்? அவன் தனக்குள் தடுமாறும்போது, "அது உண்மையாவே இருந்தாலும் நான் அப்படிதான் நினைப்பேன்," என்று அவனுக்கு சற்று நிம்மதியளித்தாள் அர்ச்சனா!

அவனுக்குள் இப்போது அவளுக்கும் சேர்த்து கோபம் வர ஆரம்பித்தது. மாமா கிஷன்லால் சொன்னது போல இவள் மனதில் இடம்பிடித்து தாலி கட்டுவது என்பது அசாதாரணமான ஒரு விஷயமாக, சிலிர்ப்பிக் கொண்டு நிற்கும் காட்டு யானை போல உணர்ந்தவன்,

"சரி அர்ச்சனா... அவன்கிட்ட பேச நீ முயற்சி செய். உன் நம்பிக்கை ஜெயிக்கட்டும். நான் வரேன்..." - என்று தற்காலிகமாய் விலகினான்.

அவன் விலகவும் சாரலும் சற்று நின்றிருந்தது! ஆனாலும் வானில் மூட்டம் விலகியிருக்கவில்லை. அவளும் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவளைப்போல புறப்பட்டாள். பங்களாவினுள் வேகமாக நுழைந்தவள் மிக வேகமாய் உடை மாற்றிக் கொண்டாள். அவளுக்கான சர்வன்ட் மெய்டன் கேர்ள், அது அவள் மாதுளம்பழ ஜூஸ் அருந்தும் நேரம் என உணர்ந்து ஐஸ் போடாமல் நுரை ததும்ப அவள் அறைக்குள் நுழையவும், "நோ... இப்ப எனக்கு எதுவும் வேண்டாம். தும் ஜாயியே..." - என்று ஒரு இந்திக்காரியான அவளிடம் இந்தியிலேயே பேசியவள்

"பட்ஜெட்டில், உள்ளாடைகளுக்கு வரிவிலக்குனு அறிவிச்சிருக்காங்களே!"
"'கவர்ச்சிகரமான அறிவிப்பு பட்ஜெட்ல இருக்கும்'னு தலைவர் சொன்னது இதைத்தானா?"
- கி.ரவிக்குமார், நெய்வேலி.



புறப்பட்டு விட்டாள்!

**வி**ஷ்ணு குடியிருந்த அபார்ட்மென்ட்டுக்குள் நுழைந்து நின்றது அவளது BMW வெண்ணிற படகு கார்!

மழை பிலிற்றிக் கொண்டேதான் இருந்தது.

அதைப் பொருட்படுத்தாமல் காரில் இருந்து இறங்கியவளைப் பார்த்துவிட்டு ஓடிவந்தான் செக்யூரிட்டி!

"மேடம்... மேடம்..."

- அவளும் அவனை ஏறிட்டாள்.

"விஷ்ணு சாரைப் பார்க்க வந்தீங்களா?"

அவள் மெல்ல தலையசைத்தாள். அவன் வரையில் அந்த கார் அவனுக்கு மிகப் பரிச்சயம். பலமுறை அர்ச்சனா அவனை இங்கே வந்து பிக்கப் செய்திருக்கிறாள். அதை வைத்தே கச்சிதமாய் கேட்டவன், "அவர் ஃப்ளாட்டை காலி பண்ணிக்கிட்டு ஃபாரின் போய்ட்டாரே மேடம்... உங்களுக்குத் தெரியாதுங்களா?" என்று தொடர்ந்தான். அக்கேள்வி அவளை திம்மென்று குத்தியது போல உணர்ந்தவள், "ஆர் யூ ஷ்யூர்?" என்று மென்று விழுங்கியபடியே கேட்டாள்.

"அப்ப அவர் ஃபாரின் போனது உங்களுக்குத் தெரியாதுங்களா?" என்று திருப்பிக் கேட்டவனை



"'எல்லா வீட்டு நாய்களும் ஜாக்கிரதை'ன்னு போர்டு தொங்குதே, இது யார் வீடு?"
"வெட்னரி டாக்டர் வீடு!"
- அம்பை தேவா, சென்னை.

சற்று பரிதாபமாய் பார்த்தாள். பின் சாரல் நனைசலை துப்பட்டாவால் துடைத்துக் கொண்டே திரும்ப காருக்குள் ஏறினாள்.

அதை ஒரு மறைவான இடத்தில் இருந்து பார்த்தபடியே இருந்தான் இந்திரஜித்! அப்போது அவனுக்கொரு செல்போன் அழைப்பு. காதைக் கொடுத்தவனுக்கு விழிகள் தெரிக்கப் பார்த்தது. போனில் கிஷன்லாலின் செகரட்ரிதான் பேசினான்.

"ஜீ... எம்டிக்கு ஆக்சிடென்டாயிடிச்சி! சீரியஸ் கண்டிஷன்ல ஜி.கே. ஹாஸ்பிடல்ல இருக்காரு... உடனே புறப்பட்டு வாங்க." அடுத்த நொடியே இந்திரஜித்துக்குள் அது தேஜாவின் வேலையோ என்கிற கேள்வி!

(தொடரும்)

# உயிர்ச் சிலிர்ப்பு



**ஜி.கே. ஹாஸ்பிடல்...**

நுழையும்போதே போலீஸ் தலைகள் தெரிந்தன... இந்திரஜித் தன் காரை பார்க் செய்த இடத்திற்கு அருகிலேயே ஐ.ஜி. சரவணகுருவின் கார் கண்ணாடி நெற்றிக்கு மேல் சிவப்பு சைரன் பொட்டோடு நின்று கொண்டிருந்தது. ஏரியா எஸ்.ஐ. வந்து ஆக்ஸிடென்ட் ரிப்போர்ட்டை முடித்துவிட்டு புறப்பட்டுக் கொண்டிருந்தார்.

இந்திரஜித் காரில் இருந்து இறங்கி ஓடும்போது சிமென்ட் ஏஜென்ட், க்ராதி கம்பி ஏஜென்ட் என்று பலர் பரபரப்போடு பழக் கூடைகளுடன் தட்டுப்பட்டு இந்திரஜித்தையும் துக்கத்தோடு நெருங்கி வந்தனர்.

"நானே இப்பதான் வரேன்... உள்ள போய் பார்த்தாதான் எனக்கே பொசிஷன் தெரியும்.



வெயிட் பண்ணுங்க, வந்து சொல்றேன்..." என்று நடந்தபடியே சொன்னான்.

கிஷன்லாலின் செகரட்ரி பிரதாப் எதிரில் காத்திருந்ததுபோல் வந்து, இந்திரஜித்தை ஐ.சி.யு. வார்டுக்கு வெளி வரை அழைத்துச் சென்றான். "உள்ள இப்ப போய் பார்க்க முடியாது சார்" என்கிற தகவலுடன், ஐ.ஜி. சரவணகுரு அங்கே ஒரு டாக்டரிடம் பேசிக் கொண்டிருக்க, இந்திரஜித்தும் சேர்ந்து கொண்டான்.

"மூணு இடத்துல எலும்பு முறிவு... அதை ஆபரேட் பண்ணிடலாம். ஸ்கல் ஸ்கேன் ரிப்போர்ட்ல பிரேக்கேஜ் எதுவும் இல்லைன்னு வந்துட்டா லால்ஜி தப்பிச்சுட்டார்னு உறுதியா சொல்லிடலாம்."

"நான் அட்மிட் ஆகியிருக்கற மினிஸ்டரை பார்க்கத்தான் வந்தேன்! அப்படியே லால்ஜிக்கு ஆக்ஸிடென்ட்டுன்னு காதுல விழவும் பார்க்க வந்துட்டேன். ஆக்ஸிடென்ட் புரொசிஜர்ஸை ஃபாலோ பண்ணிடுங்க. மற்றத நான் அந்த ஏரியா சர்க்கிள் இன்ஸ்பெக்டர்கிட்ட கேட்டு தெரிஞ்சிக்கறேன்..." என்ற ஐ.ஜி., இந்திரஜித்தைப் பார்த்தார்.

"நீங்க...?"

**வி**ஷ்ணுவின் கேள்வி முன்னால் மில்லிகிராமில் சிரித்தார் பட்டாச்சார்யா..!

பின், "இப்ப இந்த கேள்வி எதுக்கு விஷ்ணு?" என்று சிரிப்புடன் கேட்டார்.

"ஜாபால உபநிஷதம், கைவல்ய நவநீதம்னு எங்களுக்குப் புரியாத விளக்கங்களை பேசறத விட ஒரு பிராக்டிகல் டெமோ பல லட்சம் வார்த்தைகளுக்கு சமமாச்சே குரு..?" என்றான் விஷ்ணு.

"நீ அவசரப்படறே விஷ்ணு... சந்தேகம் வந்தாதான் இப்படி கேள்விகள் எழும்..."

"இல்ல... நான் நம்ப சனாதனத்தைப் பூரணமா நம்பறேன். மாணிக்கவாசகர், திருமூலர், ஆண்டாள் இவங்கள்லாம்



"என்ன, பேசினதோட 5 பவுன் அதிகமா போடணுமா?"

"நகை விலைதான் கம்மி ஆயிடிச்சே, சம்பந்தி!"

– அ. ரியாஸ், சேலம்.



என் வரைல விஞ்ஞானிகள்! உயிர் பற்றிய கேள்விகள் – அதற்கான விளக்கங்களை கடோபநிஷதமும், கருடபுராணமும் பல ஆயிரம் வருஷங்களுக்கு முன்பே சொல்லிடிச்சு. ஆனா அவ்வளவும் தியரியா இருக்கு. ஒரு பிராக்டிகலை யாராவது செய்யணும்னு நான் எதிர்பார்க்கறேன். உங்களால முடியும்னு நினைச்சதாலதான் அப்படி கேட்டேன்."

"உன் கருத்தை நான் மதிக்கறேன். நம் வாழ்க்கைல ஒளிப் புலன்களுக்கு புலனாகற விஷயம் ஒரு பாதின்னா, ஒலிப் புலனுக்கு அதாவது மனதுக்கு உணர்வால புலனாகும் விஷயம் மறுபாதி. அதாவது ஒரு பாதியை நம்பி ஏற்கத் தேவையே இல்லை. உதாரணத்துக்கு, என்னால பார்க்க முடியாத ஒன்றை ஏற்க முடியாதுன்னா, நம்மையே நாம ஏற்க முடியாது. ஏன்னா நம் வாழ்நாளில் நம் முதுகை நாம் நேரா பார்க்கவே முடியாது... அப்ப அது இல்லைன்னு அர்த்தமா?"

"இந்த விளக்கங்கள் எதற்கு குரு?"

"கூடு பாய்தலை நம்பித்தான் ஏற்க முடியும். அதனால சொன்னேன்..."

"நான் தயாரா இருக்கேன்... சொல்லப்போனா அதை கற்கவும் ஆவலா இருக்கேன்..."

– விஷ்ணுவுக்கும் பட்டாச்சார்யாவுக்குமான விவாதம் மீதமுள்ள 99 பேரை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது!

"நான் இந்திரஜித்... லால்ஜியோட..." – அவன் சொல்லி முடிக்கு முன் "ஐ நோ... ஐ நோ... அவரோட வருங்கால மாப்பிள்ளை... லால்ஜி போன வாரம்கூட ஒரு ஃபங்ஷன்ல பார்த்தப்ப சொன்னார்..." என்றார்.

அதைக் கேட்க இந்திரஜித்துக்கு அமிர்தத்தை சட்டியோடு வழித்து நக்கியதுபோல் இருந்தது.

"டேக் கேர்... நான் ஆக்ஸிடென்ட் ரிப்போர்ட்டை பார்க்கறேன். எதுவா இருந்தாலும் வி வில் மேனேஜ்... லால்ஜிக்கு நான் ரொம்ப கடமைப்பட்டிருக்கேன். அஞ்சு கோடி ரூபா வில்லா ஒண்ணை ஜஸ்ட் த்ரீ க்ரோருக்கு அவர் எனக்குக் கொடுத்திருக்காரு. எனக்குன்னா என் டாட்டருக்கு... அண்டர்ஸ்டாண்ட்!"

"ஐ நோ சார்... இப்ப நான்தான் அவர் ஆபீஸை கன்ட்ரோல் பண்ணிக்கிட்டிருக்கேன். உங்களுக்கு அவர் அலாட் பண்ணது எனக்கு நல்லா தெரியும்."

"ஸோ... நைஸ் ஆஃப் யூ... எனி ஹெல்ப் கால் மீ, யூ ஹேவ் மை பர்சனல் நம்பர்?"

"நோ சார்... ப்ளீஸ் சார்..."

அவர் உடனே ஒரு விடைப்பான கோபுர சின்னம் பொறித்த

விசிட்டிங் கார்டைத் தரவும் பெற்றுக் கொண்டான். அவர் விலகவும் பதற்றமாய் டாக்டரை பார்த்தான்.

"உயிருக்கு ஆபத்தில்ல சார்... டோன்ட் ஒர்ரி... மற்றபடி ஐ.ஜி. சார்கிட்ட சொன்னதுதான் - ஸ்கல் ரிப்போர்ட் வந்தாத்தான் எதையும் சொல்ல முடியும். வரட்டும் டீடெய்ல்டா பேசறேன்" என்று அவர் விலகிட, அடுத்து இந்திரஜித் பிரதாப்பைதான் பிடித்தான்.

வட்டக் கண்ணாடி வழியே உள்ளே கிஷன்லால் மூக்கில் ஆக்ஸிஜன் மாஸ்க்குடன், அருகாமையில் மானிட்டரில் ஒளிப்புள்ளிகளின் ஏற்ற இறக்கமான ஓட்டத்தோடு படுத்திருப்பது நன்கு தெரிந்தது.

"என்ன பிரதாப்... நீ கார்ல அவர்கூட போகலியா? எப்படி நடந்துச்சு இந்த ஆக்ஸிடென்ட்?"



"எல்லாம் ஒரு எருமை மாடால சார்! வண்டலூர் தாண்டி படப்பை ரூட்ல போகும்போது சட்னு ஒரு எருமை குறுக்க வரவும் டிரைவர் கிருஷ்ணன் வளைச்சு ஒடிச்சிருக்கான். முடியல சார்... பக்கத்து புளிய மரத்துல மோதிடுச்சு.

நல்லவேளை அரை மயக்கத்துல கிருஷ்ணன் எனக்குத் தகவல் கொடுத்துட்டு மயங்கிட்டான். அப்புறம் எல்லாத்தையும் நான்தான் சார் ஆர்கனைஸ் பண்ணேன்."

"கிருஷ்ணன் இப்ப எப்படி இருக்கான்?"

"ஐ.சி.யு.வுல அந்த பக்கமா இருக்கான் சார்... உயிருக்கு ஆபத்து இல்ல சார்..."

"நீ சார் கூட போகலையா?"

"என்னை மாம்பாக்கம் சைட் அப்ரூவலுக்காக பஞ்சாயத் போர்டு ஆபீஸுக்குப் போக சொல்லிட்டாரு. ஆக்ஸிடென்ட் ஆனப்ப அங்கதான் சார் இருந்தேன்."

"ஆமா அர்ச்சனாவுக்குத் தெரியுமா?"

"உங்களுக்கு போன் பண்ணப்பவே அவங்களுக்கும் பண்ணிட்டேன், வந்துக்கிட்டிருப்பாங்க..."

பிரதாப் சொல்லி வாய் மூடவும், அர்ச்சனா அங்கு

மார்பு இளைக்க நுழையவும் சரியாக இருந்தது. எப்போதும் பளிச்சென்று பளிங்காட்டம் இருப்பவள், வாட்டிய வாழை இலை போல துவளலுடன் பிரதாப், இந்திரஜித் முன்னால் வந்து நின்று இருவரையும் ஊடுருவினாள்.

"என்னாச்சு இந்திரஜித்... அப்பாக்கு இப்ப எப்படி இருக்கு?" என்று குரல் நடுங்க கேட்டாள்.

"பதற்றப்படாதே அர்ச்சனா... உயிருக்கு எந்த ஆபத்தும் இல்லை..."

"எப்படி இப்படி ஆச்சு... கிருஷ்ணன் எப்பவும் கேர்ஃபுல்லா தானே ஓட்டுவான்?"

"இப்பகூட கிருஷ்ணன் மேல தப்பில்ல மேடம். எல்லாம் ரோட்ட கிராஸ் பண்ண ஒரு எருமையால வந்த வினை..." - செகரட்ரி பிரதாப் இடையிட்டான்.

"வாட்... எருமையா? சிட்டியில ஏது எருமை?"

"இது அவுட் ஆஃப் சிட்டி மேடம். வண்டலூர்கிட்ட படப்பை போற வழியில..."

"நான் இப்ப அப்பாவை பார்க்கலாமா?"

"நாட் அலவ்ட்... சாரும் கான்ஷியஸ்ல இல்ல மேடம்..."

- பிரதாப் சொல்ல, அர்ச்சனாவின் விழிகள் ஒன்றிரண்டு கண்ணீர் உருண்டைகளை உருட்டி விட்டன.

"என்னாச்சு இந்திரஜித்... அப்பாக்கு இப்ப எப்படி இருக்கு?'' - என்று குரல் நடுங்க கேட்டாள்.

அதைப் பார்த்த இந்திரஜித் துக்கும் லேசாய் வலித்தது.

"வெரி சாரி அர்ச்சனா... ஒருபக்கம் உனக்கு அந்த துரோகியால வருத்தம். இப்ப அப்பாவுக்கு இப்படி ஆனதால வருத்தம்... என்னால புரிஞ்சிக்க முடியுது..." என்றான். விஷ்ணுவை அவன் துரோகி என்று சொன்னது பிடிக்காமல் அடுத்த நொடியே அவனை முறைக்கத் தொடங்கினாள் அர்ச்சனா.

"புரியுது... இன்னும் நீ அவனை நம்பிக்கிட்டிருக்கே. அங்கிள் இப்படி கிடக்க கூட அவன்தான் காரணம். படப்பைல ஒரு புது புராஜெக்ட்... அது அவனோடதுன்னு கேள்விப்பட்டு பார்க்கப் போனப்பதான் இப்படி ஆகியிருக்கு."

- ஒரு பொய்யை இந்திரஜித் சாதுர்யமாக சொல்லப் பார்த்த அடுத்த நொடியில், "அது என்ன புது புராஜெக்ட்... அப்புறம் எப்படி

"டாக்டர்கிட்ட வலிமை அப்டேட் கேட்டது தப்பாயிடுச்சு!"

"ஏன்?"

"வலிமையை செக் செய்ய ஃபுல் பாடி செக்கப் செய்யச் சொல் லிட்டாரு!"

– சிவம், திருச்சி.



விஷ்ணு யு.எஸ். போக முடியும்?" என்று அவனை மடக்கினாள் அர்ச்சனா.

"அது... அது எனக்கு டீடெய்ல்லாம் தெரியாது. மாமாவும் டவுட்லதான் போயிருக்காரு. ஆனா அவன் யு.எஸ். போயிட்டது உறுதி!" என்றான் அழுத்தமாய்... வேகமாய்..!

அர்ச்சனா பதிலுக்கு எதுவும் பேசாமல் அருகிலுள்ள ஸ்டூல் நாற்காலி ஒன்றில் சிந்தனையோடு போய் உட்கார்ந்தாள்.

அப்போது இந்திரஜித் போனுக்கொரு அழைப்பு. வைப்ரேஷன் மோடில் மார்பில் 'டிர்டிர்' என்று டிர்ர்ரித்தது. எடுத்து திரையை பார்க்கவும் தேஜா என்கிற எழுத்துகள் தெரிந்து மனதும் சற்று கிடுகிடுத்தது.

காதைக் கொடுக்க தயக்கமாக இருந்தது. இருந்தும் ஒதுங்கிச் சென்று அரை மனதாக கொடுத்தான்.

"என்ன பாஸ்... ஆஸ்பத்திரில இருக்கீங்க போல..?"

"தேஜா... அநாவசியமா தொந்தரவு பண்ணாதே... நான் இப்ப பயங்கர மூட் அவுட்ல இருக்கேன்..."

"நீங்க எப்படி வேணா இருந் துட்டு போங்கோ... எனக்கு நான் கேட்ட பணம் வந்தாகணும். என்னை சமாளிக்க பயந்துகிட்டுதான் உங்க மாமா ஆக்ஸிடென்ட் டிராமா போட்டிருக்காரா?"

"யு ஸ்கவுண்ட்ரல்! இது எதிர்பாராம நிஜமா நடந்த ஆக்ஸிடென்ட். வந்து பார் தெரியும்.."

"சும்மா போட்டு வாங்குனேன் பாஸ்.. எங்க வேலைக்கு ஆஸ்பத்திரி எனக்கு ரொம்பவே வசதியான இடம்.. நான் சொன்ன கெடு முடிய இன்னும் சில மணி நேரமிருக்கு... பணம் வரலைன்னா உங்க மாமா பொணமாகறத யாரும் தடுக்க முடியாது. அதைச் சொல்லத்தான் கூப்பிட்டேன்."

"தேஜா.. நோ! நீ டூ மச்சா போறே.."

"எல்லாம் சரியாத்தான் போறேன்

பாஸ். நீங்க என்ன இல்லாதவங்களா? ஆயிரமாயிரமாதான் அடுக்கி வெச்சிருக்கீங்களே... அதுல இன்னொரு கோடி எடுத்து கொடுத்தா என்ன பாஸ் குறைஞ்சிடும்?"

"பணம் இங்க பிரச்னையே இல்லை. ஆனா நீ இதையே ஒரு சாக்கா வெச்சுக்கிட்டு அடிக்கடி கேட்டா என்ன பண்றதுங்கறதுதான் என் மாமாவோட பயம்..."

"ஹை... இப்படி ஒரு மேட்டர் இருக்குதா? இதுகூட நல்லா இருக்குதே?"

"தேஜா என்ன நீ... நான் பேசறத அப்படியே பிடிச்சிக்கறே?"

"பின்ன... நான் என்ன மகாத்மாவா? கேடுகெட்ட கொலைகாரன். கொலைகாரன்லாம் இப்படிதானே பேசுவான்?"

"தேஜா ப்ளீஸ்... நான் இப்ப ரொம்பவே இக்கட்டுல இருக்கேன்... எதுக்காக உன்னை விட்டு அந்த விஷ்ணுவைக் கொன்னேனோ அந்த காரியம் நடக்குமான்னு இருக்கு. அர்ச்சனா இன்னும் என் வழிக்கு வரலை..."

"இதெல்லாம் எதுக்கு பாஸ் என்கிட்ட சொல்லிக்கிட்டு... எனக்குத் தேவை பணம். உங்க மாமா ஆஸ்பத்திரில கிடக்கறதால இன்னொரு நாள் டயம் தரேன். பணத்தைக் கொடுத்துட்டு தப்பிக்கற வழியைப் பாருங்க. இல்ல உங்க மாமா உயிர் போகப்போறது மட்டுமில்ல... அந்த விஷ்ணுவை கொன்ன வீடியோ உங்க அர்ச்சனாக்கு பாஸ் ஆயிடும். அப்புறமென்ன... சுனாமிதான்!"

- சொல்லிவிட்டு சிரித்தான் தேஜா. இந்திரஜித்துக்கோ இப்போதே காலடியில் பூமி நடுங்க ஆரம்பித்துவிட்டது! தடுமாற்றமுடன் ஜன்னல் வழியே வெளியே எதார்த்தமாகப் பார்த்தான். கீழே சாலையில் ஒரு எருமை, மேலே அவன் நின்று பார்க்கும் ஜன்னலையே பார்த்தபடி நின்றுகொண்டிருந்தது! நல்ல மதர்த்த எருமை...!

(தொடரும்)



"காலம் மாறிப் போச்சு பாருங்க !"

"எதைச் சொல்றீங்க?"

"முன்னே செல்போன் கேட்டு அழுத பையன், ஆன்லைன் கிளாஸ் வந்த பிறகு ஏன் வாங்கிக் கொடுத்தீங்கன்னு கத்துறான் !"

- ஐ. ஈனோஸ், சென்னை.





எருமையைப் பார்த்த இந்திரஜித்துக்குப் பகீரென்றது! ஒரு எருமை தெருவில் திரிவதற்கும், அண்ணாந்து பார்ப்பதற்கும் வித்தியாசம் இருக்கிறதே! குழப்பத்தோடும், சுரக்கத் தொடங்கிவிட்ட ஒரு வகை பயத்தோடும் நின்றவன் கவனத்தை பிரதாப் வந்து கலைக்கத் தொடங்கினான்.

“சார்...”

“என்ன பிரதாப்..?”

“மேடம் எம்.டி.ய கிட்ட போய் பார்க்கணும்னு ஆசைப்படறாங்க...”

“அதுக்கு நான் என்ன பண்ண முடியும்? போய் டாக்டர் கிட்ட கேளு...”

“கேட்டேன்... இப்ப வேண்டாம், இந்த கோவிட் காலத்துல நான் உங்கள வார்டுக்கு வெளியே அட்மிட் பண்ணியிருக்கறதே அதிகம்னு சொல்லிட்டார்.”

“அதை அப்ப அர்ச்சனா கிட்ட சொல்.”

“சொன்னேன்... இப்ப மட்டும் விஷ்ணு இருந்திருந்தா ஏதாவது பண்ணி அப்பா கிட்ட கூட்டிக்கிட்டு போயிருப்பான்னு அவங்க சொன்னதையும் கேட்டேன்.”



இந்திரா சௌந்தர்ராஜன்

பிரதாப் சொன்ன பதில் ஒரு பாக்ஸிங் கிக் போல் இருந்தது இந்திரஜித்துக்கு.

"நான்கூட விஷ்ணு சாருக்கு தகவல் தருவோம்னு ட்ரை பண்ணேன் சார். அவர் செல் ஸ்விட்ச் ஆஃப்னே வருது. சைபர் க்ரைம்ல யார்கிட்டயாவது பேசி விஷ்ணு சார் செல் இப்ப எங்க இருக்குன்னு கண்டுபிடிக்க முடியுமான்னும் மேடம் கேட்டாங்க சார்..." - பிரதாப் தொடர்ந்து புளியைக் கரைக்கத் தொடங்கினான்.

"அவசியமில்ல.. அவன் யு.எஸ். போய்ட்டான். ஏர்போர்ட்ல அவனை நம்ம மேனேஜர் ராம்சிங் பார்த்திருக்கார்."

"எதனால சார் இப்படி யார்கிட்டேயும் சொல்லாம கொள்ளாம அவர் போகணும்?"

- பிரதாப் இயல்பாகத்தான் கேட்டான். இவனுக்கு வாயால் பதில் சொல்வதைவிட அந்த வீடியோவை காட்டி வாயடைப்பதே உத்தமம் என்று தோன்றியது இந்திரஜித்துக்கு!

அடுத்த நொடி தன் செல்போனில் இருந்த அதை ஓடவிட்டு, "பாருய்யா... பாரு..." என்று காட்டினான். பிரதாப்பும் அதை கையில் வாங்கிக்கொண்டு கவனமாகிவிட, இந்திரஜித் பார்வை திரும்ப ஜன்னல் வழியே




வெளியே பார்த்தது. இப்போது அந்த எருமை அங்கே இல்லை!

'அப்பாடா..!' - ஒரு நூலிழைப் பருமனுக்கான நிம்மதி.

"என்னால நம்பவே முடியல சார். அதேசமயம் ரொம்ப சுயமரியாதையோட நடந்துகிட்டிருக்கார் சார் விஷ்ணு..." என்றான் பிரதாப்.

நல்லவேளை இது மாஃபிங் வீடியோ...! இதை நம்புவதற்கில்லை என்று இவன் சொல்லவில்லை.

"சரி சரி... இனி அவன் பேச்சை எடுக்காதே. அவன் நம் வரையில துரோகி. அவனைப் போய் சுயமரியாதைக்காரன்னு பாராட்றே. எம்டி எவ்வளவு ஃபீல் பண்ணிட்டார் தெரியுமா?"

"எனக்கு அப்படி எதுவும் தெரியல சார். படப்பைக்கு போகும்போது கூட ரொம்ப ஹேப்பியாத்தான் சார் இருந்தார். அப்புறம் ஒரு முக்கியமான விஷயம் சார்..."



"என்ன?"

"மும்பைல இருக்கற பெல்லாரி பாபு கிட்ட போன் பண்ணி பர்சனலா பேசினாரு... அப்ப மட்டும் கொஞ்சம் டென்ஷன்ல இருந்தாரு..."



"பெல்லாரி பாபு கிட்டையா?"

- பலமாக அதிர்ந்தான் இந்திரஜித்! பெல்லாரி பாபு - ஒரு இன்டர்நேஷனல் தாதா!

"சார் அவன்கூட எதுக்கு பேசினார்னுதான் தெரியல?"

- பிரதாப் சொல்லி முடிக்க இந்திரஜித்துக்குள் உடனே ஒரு தெம்பு.

'தேஜாவுக்காக தான் பெல்லாரி பாபுவிடம் கிஷன்லால் பேசியிருக்க வேண்டும். அப்படி இருந்தும் தேஜா விடாமல் மிரட்டினானே? ஒருவேளை பெல்லாரி பாபு இனிமேல் தான் தேஜாவிடம் பேசக் கூடுமோ?'

- கேள்விகள் உள்ளோடும்போது அர்ச்சனா கிருமிநாசினிக்கான கவச உடையோடு ஐ.சி.யு. வார்டுக்குள் டாக்டரோடு நுழைவது தெரிந்தது. அவளாக முயற்சி செய்து அந்த கட்டுப்பாட்டையும் பிரேக் செய்து விட்டதை அவனும் புரிந்து கொண்டான்.

ஐசி.யு. வார்டுக்குள் ஆக்ஸிஜன் மாஸ்க்குக்குள் கிஷன்லாலின் வெளுப்பும் சிவப்புமான முகம் பரிதாபமாகத் தெரிந்தது.

நெற்றி நடுவில் எப்போதும் துர்கா குங்குமக் கீற்று இருக்கும். இப்போது அது கலைந்து போய் அதன் தடயம் மட்டும் தெரிந்தது. அருகாமை மானிட்டர் மீட்டரில் ஒளிப்புள்ளிகள் சிறுபிள்ளைகள் போல ஓடி விளையாடிக் கொண்டிருந்தன.

அர்ச்சனாவுக்குப் பார்க்கப் பார்க்க விம்மியது மனசு. கண்ணீர் மளுக்கென்று துளிர்த்து மாஸ்க் நனையத் தொடங்கியது. அருகே நெருங்கி ஸ்பரிசிக்க ஆசைப் பட்டவளை பார்வையாலேயே தடுத்தார் டாக்டர்.

சில நிமிடங்கள் அப்படியே நின்று பார்க்க அனுமதி தந்தார். அப்போது ஒரு அதிசயம் போல கிஷன்லாலும் கண்களைத் திறக்க முயற்சிப்பது தெரிந்தது.

"டாக்டர்..." என்று அர்ச்சனா

"அந்த யோகவதன வகுப்பில் யாரும் பெரிதாகக் கேள்வி கேட்டதேயில்லை. பட்டாச்சார்யா சொல்வதை அப்படியே செய்துவிட்டு போய்க்கொண்டே இருப்பார்கள். விஷ்ணு கேள்விகள் கேட்கவும் எல்லோருக்கும் ஓர் ஆச்சரியம்.

அவன் கேட்ட கேள்விகள் அவர்களிடமும் இருந்ததால் அதற்கு பட்டாச்சார்யா பிராக்டிகலாக தரும் பதிலை எல்லோருமே எதிர்பார்த்தனர்.

பட்டாச்சார்யாவும் அதை நம்பித்தான் ஏற்கமுடியும். எல்லோர் முன்னிலும் ஒளிப்புலனாக நிரூபிக்க முடியாது என்று சொன்னதையும் ஏற்றுக்கொண்டு, எங்கள் உள்ளுணர்வு அதை நம்பினால் போதும் என்கிற தங்கள் கருத்தையும் முன் மொழிந்தனர்.

அப்போது பட்டாச்சார்யா ஒரு கருத்தை உறுதியாக முன் வைத்தார்.

'சீடர்களே! இந்த கூடு பாய்தல் பற்றி நீங்கள் யாரிடம் சொன்னாலும் அவர்கள் சிரித்துவிடுவார்கள். இந்த நூற்றாண்டின் மிகப்பெரிய பொய் என்றும், அதிபயங்கரமான ஒரு இல்லூஷன் என்றும், இது ஒருவகை ஃபோபியா என்றும் உங்களை மிக மட்டமாக விமர்சித்து, உங்களது உண்மையான டாக்டர், இன்ஜினியர், தொழிலதிபர் என்கிற புற பரிமாணங்களைக் கூட மதிக்காமல் போய்விடுவார்கள் எச்சரிக்கை..!' என்றார்.

'இந்த கருத்து பயம் எனக்கு துளியும் இல்லை குரு. நசிகேதன் என்பவன் கடோபநிஷதத்தில் எமனிடம் கேட்டது போல் உங்களிடம் நான் கேட்டிருக்கிறேன்!'" என்றான் விஷ்ணு!

சுட்டிக்காட்ட டாக்டரும் நெருங்கிவர அவரும் கண்களைத் திறந்தார்.

"பிதாஜி...'' என்றாள் அர்ச்சனாவும்...

"அர்ச்சா..."

"ஹாங் பிதாஜி...'' - அர்ச்சனா அவரை நெருங்கி டாக்டர் தடுத்ததையும் மீறி கைகளைப் பற்ற முயற்சித்தாள். ஆனால் அதில் சலைன் ஏறிக் கொண்டிருந்தது. டாக்டர் பார்வையாலேயே கன்ட்ரோல் யுவர்செல்ஃப் என்பது போல பார்த்தார்.

அவளும் புரிந்துகொள்ள கிஷன்லால் பேசத் தொடங்கினார்.

"அர்ச்சனா...!"

"அப்பா ஸ்டெரெய்ன் பண்ணாதீங்க... நீங்க கண் திறந்திட்டீங்க. எல்லாம் இனி சரியாயிடும்..."

- மெல்லிய படபடப்போடு பேசினாள் அர்ச்சனா.

"அர்ச்சா... இப்படி ஆகும்னு நான் கொஞ்சம் கூட எதிர்பார்க்கலடா. ஆமா, இந்திரஜித் வரலையா?"

"வந்திருக்கான்... வெளிய இருக்கான்..."

"அவனைக் கூப்பிடு...

நான் ரெகவர் ஆகி வருவேனோ மாட்டேனோ...?"

"நோ... நெகடிவா எதையும் பேசாதீங்க..."

"இது நெகடிவ் இல்ல... எதார்த்தம் அர்ச்சா! எனக்கு இப்ப எதுவும் பெருசு இல்லை. நம்ப கன்ஸ்ட்ரக்ஷன் பிசினஸ் கூட எப்படியோ போகட்டும். ஆனா எனக்கு உன் எதிர்காலம் இப்ப ரொம்ப முக்கியம்..."

"அதை எல்லாம் அப்புறமா பேசிக்கலாம் பிதாஜி..."

"அந்த விஷ்ணு ஒரு துரோகி... நீ இனியும் அவனை நினைச்சுக்கிட்டிருக்கக் கூடாது..."

"பிதாஜி... ப்ளீஸ் இப்ப அந்த பேச்செல்லாம் வேண்டாம்."

"இப்ப பேசாம நான் வேற எப்ப பேசமுடியும்... எனக்கு ஏதாவது ஆயிட்டா உனக்கு யார் இருக்கா? அம்மான்னு ஒருத்தி இருந்தாலாவது பரவாயில்ல..."

- கிஷன்லால் சிரமத்துடன் பேசுவதை டாக்டர் தடுக்க வேண்டி இடையிடத் தொடங்கினார்.

"மிஸ்டர் கிஷன்லால்... நீங்க இப்ப ஸ்ட்ரெய்ன் பண்ணக்கூடாது. ஹார்ட் பீட் அப்நார்மல் ஆனா சென்ட்ரல் சிஸ்டம் கொலாப்ஸ் ஆயிடும். மிஸ் அர்ச்சனா, ப்ளீஸ் இங்க இருந்து முதல்ல புறப்படுங்க."



"நோ டாக்டர்... ஒன் செகண்ட்! அர்ச்சா எனக்கு வர்ற முகூர்த்தத்துல உன் கல்யாணம் நடந்தாகணும். என்னோட ரெகவர் இப்ப உன் கைலதான் இருக்கு.

அந்த விஷ்ணு உனக்கு செய்த துரோகத்துக்கு நீ பதிலடி கொடுத்தே தீரணும். இந்திரஜித் உன்மேல உயிரையே வெச்சிருக்கான். இனியும் பிடிவாதம் பிடிக்காம என் பேச்சைக் கேளு... ப்ளீஸ்..."

- கிஷன்லால் பேச்சைக் கேட்டபடியே அங்கிருந்து வெளியே சென்றாள் அர்ச்சனா.

வெளியே இந்திரஜித் நின்று பார்த்துக்கொண்டே இருந்தான். அவளோ அவனைப் பார்க்க விரும்பாதவள் போல வெளியேறினாள்! பிரதாப் அவளை வழியனுப்பு

வதற்காக பின்னால் சென்றான்.

அப்போது ஒரு ஸ்டாஃப் நர்ஸ் இந்திரஜித்தை உள்ளே அழைத்தாள். நேராக கிஷன்லா லிடம் விட்டுவிட்டுச் சென்றாள்.

கிஷன்லால் அவனை கண்கள் சிமிட்டப் பார்த்தார்.

"அங்கிள்..."

"என்ன இந்திரஜித்... எனக்கு சீரியஸ்ங்கறத நீயும் நம்பிட்டியா?" - லேசான முறுவலுடன் கேட்டார்.

"அப்படின்னா அந்த ஆக்ஸிடென்ட்?"

"அது உண்மைதான்... ஆனா என் உயிருக்கு அதனால எந்த ஆபத்தும் இல்லை. சின்னச் சின்ன காயங்கள், தட்ஸ்ஆல்!"



"அப்ப இங்க நீங்க இருக்கறதெல்லாம்?"

"எல்லாமே உனக்காகத்தான்... இந்த ஆக்ஸிடென்ட்டை காரணமா வெச்சு உனக்கும் அர்ச்சாவுக்கும் கல்யாணத்த முடிச்சிட விரும்பறேன். டாக்டர்கிட்ட ஹெல்ப் பண்ணச் சொல்லி ரிக்வெஸ்ட் பண்ணேன். அவரும் சரின்னுட்டார்..."

"ரியலி இது பெரிய சர்ப்ரைஸ் அங்கிள் எனக்கு. உங்க புத்திசாலித் தனம் யாருக்கும் வராது."

"அர்ச்சனா கிட்ட உங்க கல்யாணப் பேச்சை ஆரம்பிச் சிட்டேன். அவளை அவ போக்குல போய் பிடிக்கறது ரொம்பக் கஷ்டம். டைமும் வேஸ்ட்டாகும். அதான் சாகறதுக்குள்ள உன் கல்யாணத்த பார்க்க விரும்பறேன்னு ஒரு நெருக்கடியை உருவாக் கிட்டேன்... இதை நீயும் நல்லா பயன்படுத்தி அவ கழுத்துல தாலியை எப்படியாவது கட்டிடணும்."

"நோ பிராப்ளம் அங்கிள்... நான் அவ வரைல பக்குவமா தான் நடந்துக்கிட்டு வரேன்."

"அப்புறம் அந்த தேஜா விஷயமா நான் மும்பைல இருக்கற பெல்லாரி பாபு கிட்ட பேசியிருக்கேன். பாபு இனி தேஜாவை பாத்துக்குவான். நீ அவனைப் பற்றி கவலைப் பட வேண்டாம். உன் கவனமெல்லாம் அர்ச்சனா கழுத்துல தாலி கட்டறதுல மட்டும்தான் இருக்கணும்."

- கிஷன்லால் சொல்லி முடிக்கும் முன் தன் கைகளால் அவர் காலைத் தொட்டு வணங்கியவன் அப்படியே தலையைச் சரித்து உணர்ச்சி வசப்படலானான்.

"ஹேய்... போய் கல்யாண வேலையைப் பார். இனி எங்கேயும் சின்ன தப்பு கூட நடந்துடக் கூடாது... கபர்தார்!"

- கிஷன்லாலின் எச்சரிக்கையை



"இந்த பல் டாக்டருக்கு கமல்ஹாசனை பிடிக்காது!"

"இருக்கட்டும். அதுக்காக, பேஷண்ட் வாய்க்குள்ள 'டார்ச் லைட்'டுக்கு பதிலா, சிகரெட் லைட்டரை அடிச்சிப் பார்க்கறது நல்லாயில்லை!"

– அப்ரோஸ் பானு, சென்னை.

வேதவாக்காக எடுத்துக் கொண்டு விலகினான். ரிசப்ஷன் பக்கம் வரவும் கான்ட்ராக்டர்கள் சூழ்ந்து கொண்டனர்.

"எம்.டி. உயிருக்கு ஒண்ணும் ஆபத்து இல்லை. ஆனா அவரை இப்ப பார்க்க முடியாது,'' என்று அவர்களை சமாளித்து அனுப்பியவன், ஒரு ஓரமாகப் போய் தேஜாவுக்கு போன் செய்தான்!

தேஜாவும் கோபமாக "என்ன உங்க மாமா என்னை கன்ட்ரோல் பண்ண பெல்லாரி பாபுகிட்ட போய்ட்டாரா?" என்று ஆரம்பித்தான்.

"ஆமாம் தேஜா... ஆனா நான் உனக்கு என் பர்சனல் ரிஸ்க்குல பணம் கொடுத்துட முடிவெடுத்துட்டேன். பாபுவை நீ மைண்ட் பண்ணாதே! நானே பணத்தோட வரேன்... நமக்குள்ள பகை வேண்டாம். எனக்கும் அர்ச்சனாவுக்கும் கல்யாணம் நடக்கப் போறது கிட்டத்தட்ட உறுதி ஆயிடிச்சு. எனக்கு உன் சப்போர்ட் எப்பவும் வேணும்," - என்று ஆறுதலாகவும் ஒரு மாதிரியும் பேசினான்.

"என்ன பாஸ்... அப்படியே பல்டி அடிக்கிறீங்க. தப்பா தெரியுதே..." என்று இழுத்தான் தேஜா!

"நீ எப்படி எடுத்துக்கிட்டாலும் சரி... என் வரைல நீ இன்னும் சில பேரைகூட போட்டுத் தள்ள வேண்டியிருக்கு..."

"ஓ விஷயம் அப்படிப் போவுதா... யாரு அவங்க?" தேஜா கேட்க, "அதை நேர்ல சொல்றேன்," என்றபடியே புறப்பட்டவன் தன் காரில் ஏறிக்கொண்டு பார்க்கிங்கை விட்டு வெளியே வந்தபோது, அந்த எருமை அவனுக்காகவே காத்திருப்பதுபோல் நின்று கொண்டிருந்தது!

(தொடரும்)

13 வார தொடர்

எருமையைப் பார்த்த மாத்திரத்தில் இந்திரஜித்திடம் ஓர் உதறல்! எருமை குறுக்கிட்டதால்தான் கிஷன்லால் ஆஸ்பத்திரியில் படுக்கையில் கிடக்கிறார். எருமை தான் இங்கேயும் தோன்றி மறைந்து போக்குக் காட்டிக் கொண்டு இருக்கிறது.

அந்த எருமையும் அவன் காருக்கு முன்னால் நடுச்சாலையில் முடிந்தால் தாண்டிப்போ என்பது போல பார்த்தபடி நின்றுவிட்டது. இந்திரஜித் ஹாரனை அடித்துப் பார்த்தான். அது நகர்வதாகத் தெரியவில்லை. போக்குவரத்தும் தேங்கத் தொடங்கி பின்னால் வந்தவர்கள் ஹாரன்களை அழுத்த ஒரே சப்த மேளா!

இறங்கிச் சென்று விரட்டவும் தயக்கமாகவும் ஏன் பயமாகக்கூட இருந்தது.

நல்லவேளை... ஆஸ்பத்திரி வாசலில் இருந்த பிரதாப் இந்தக் கூத்தைப் பார்த்துவிட்டு ஓடிவந்தான்.



எருமை அருகே துணிச்சலாக சென்று அதன் முதுகைத் தட்டவும் அதுவும் நகர்ந்து வழிவிட்டது.

அப்பாடா..!

இந்திரஜித் வரையில் ஒரு நிம்மதி. காரைக் கிளப்பச் செய்ய, கையை காட்டி தடுத்த பிரதாப், "சார், கேன் ஐ கெட் இன்?" என்று கேட்டான்.

"கமான்... கெட் இன்..." என்று இந்திரஜித்தும் கூறிட, வேகமாக ஏறிக் கொண்டான்.

காரும் ஓடத் தொடங்கியது. அதற்குள்ளாகவே உள் ஏ.சி.யை மீறி காதோரம் வியர்வைப் புழுவின் நெளிசல்.

"என்ன சார்... பயங்கர டென்ஷன்ல இருக்கீங்க போல..?" என்றான் ரியர் மிர்ரரில் இந்திரஜித் முகத்தைப் பார்த்தபடியே...

"ஆமாமா... எருமை ஒரு நிமிஷம் பதறவெச்சிடிச்சு. பாஸ் இப்ப ஹாஸ்பிடல்ல கிடக்கவும் ஒரு எருமைதானே காரணம்?"

'கடோபநிஷதத்தில் நசிகேதன் என்கிற சிறுவன் எமனையே உலுக்கி எடுத்துவிடுவான். உடம்பில் உயிர் என்பது எங்கே எப்படி இருக்கிறது? இறப்புக்குப் பிறகு அது என்னாகிறது? இதெல்லாம்தான் அந்த வாண்டு கேட்ட கேள்விகள்.

இக்கேள்விகளை ஒவ்வொரு மனிதனுமே தன் வாழ்நிலையில் என்றோ எப்போதோ கேட்டுக் கொள்ளத்தான் செய்கிறார்கள். ஆனால், பொட்டில் அடித்தாற் போல் ஒரு விடையை சொல்லத்தான் இங்கே யாருமில்லை.

மதங்கள் மட்டுமே உயிர் ஒரு தனிமம் என தாங்கிப் பிடிக்கின்றன! சாட்சிக்கு இயேசுநாதர் உயிர்த்து எழுந்தது முதல், பாம்பு கடித்து இறந்தவர்கள் உயிர்த்து எழுந்த கதைகள் வாயிலாக

"கரெக்ட் சார்... எனக்கும் நீங்க இப்ப சொல்லவும்தான் கனெக்ட் ஆகுது..."

"நல்லவேளை நீ வந்தே... பை த பை கார்ப்பரேஷனுக்கு

"கூட்டணிக் கட்சித் தலைவர் நேத்தே 'சீட்' வாங்கிட்டுப் போயிட்டாரே, இன்னைக்கு பொருளாளர் எதுக்கு வந்திருக்காரு?"

"'நோட்' வாங்கவாம்!"

- ஆர். சுப்பு, திருத்தங்கல்.



உயிர்க்கொள்கையை நிறுவுவதோடு சொர்க்கம், நரகம், நியாயத் தீர்ப்பு, மறுபிறப்பு எல்லாம் உண்டு என்கின்றன.

விஞ்ஞானம் இதை மறுப்பதோடு அதை நிரூபி என்கிறது. 'டன்கள் மெக்டுகால்' எனும் விஞ்ஞானி தன் ஒரு ஆராய்ச்சியில் உயிர் மின்சாரம் போல் வந்து போவதல்ல... அது ஒரு விசை. அதன் எடை 21 கிராம் என்று ஆறு பேரின் மரணத்தை அருகில் இருந்து கவனித்து அவர்களை இறப்புக்கு முன், இறப்புக்குப் பின் என்று எடை போட்டதைக் கூறினார்.

கடந்த 2003-ஆம் ஆண்டு '21 Grams' என்கிற பெயரில் இதையொட்டி ஒரு திரைப்படம் கூட வந்தது. ஆனாலும் விஞ்ஞானிகள் இந்த உயிரின் எடை 21 கிராம் என்பதை ஏற்கவில்லை.

விஞ்ஞானம் எப்போதுமே இப்படித்தான்!

ஆனால் நம் சித்த புருஷர்கள் உயிர்ப்பறவையை பிடிக்க முடிந்த வேடர்களாக இருந்தார்கள் என்பதுதான் ஆச்சரியம். இவர்களில் திருமூலர் பெரும் சாகஸக்காரர்.

'தன்னில் தன்னை அறியும் தலைமகன்
தன்னில் தன்னை அறியில் தலைப்படும்
தன்னில் தன்னை அறியிலன் ஆயிடில்
தன்னில் தன்னையும் சார்ந்தற் கரியவனே!

- என்று அப்பர் சுவாமிகளும் தன்னை அதாவது தன்னுள் உள்ள உயிரை அறிதல் பற்றி கூறியுள்ளார்...'

- இப்படி பட்டாச்சார்யா தந்த விளக்கம் விஷ்ணுவை மட்டுமல்ல, அவன் சார்ந்த 99 பேரையும் வியக்க வைத்து தங்களுக்குள் தங்கள் உயிரை எப்படி அறிவது என்கிற கேள்வியையும் அவர்களுக்குள் எழுப்பியது!

கம்ப்ளைண்ட் பண்ணு பிரதாப். இப்படி தெருவுல சுத்தற மாடுகளை பிடிச்சிக்கிட்டாவது போகட்டும்... என்னதான் பண்றாங்க அவங்க?" - என்று கோபமானான் இந்திரஜித்.

"விடுங்க சார்... பை த பை எம்டிய பாத்து பேசினீங்க போல தெரியுதே சார்..?"

"ஆமாம்... அதுசரி... அர்ச்சனா போய்ட்டாளா?"

"போய்ட்டாங்க சார்... டிரைவர் கிட்ட மயிலாப்பூர் ஷீரடி பாபா கோவிலுக்கு வண்டிய விட சொன்னாங்க..."

"ஐஸீ"

"விஷ்ணு சாரோட ரெகுலர் கோவில் சார் அது... டெய்லி அங்க போகாம அவர் ஆபீஸுக்கு வரமாட்டார். பாக்கெட்ல எப்பவும் பாபாவோட விபூதி இருக்கும்..!"

- பிரதாப் விஷ்ணுவைத் தொடவும் இந்திரஜித் முகத்தில் ஒரு அசுர மாற்றம்.

"பிரதாப்... இனி அவனைப் பற்றி பேசவே பேசாதே... அவன் ஒரு துரோகின்னு எத்தனை தடவை சொல்றது..?"

"ஸாரி சார்... என்னமோ

என்னால அவரை ஒரு துரோகியா ஃபீல் பண்ணவே முடியல சார்..."

"விட்டுட்டே ஓடிட்டான்... விடியோவை பார்த்துதானே?"

"அதை மேடம் நம்பலன்னு நல்லா தெரியுது சார்..."

"அவ... ஸாரி, அவங்க ஒரு ப்ளைண்ட்...! எப்படி நான் இவங்கள கல்யாணம் பண்ணி கிட்டு குப்பை கொட்டப் போறேனோ தெரியல..."

"சார்..!!"

"ஆமாம் பிரதாப்... எம்.டி. ஐமீன் அங்கிள் அதைத்தான் இப்ப என்கிட்ட பேசினார். எனக்கு ஏதாவது ஆகறதுக் குள்ள உங்கள நான் தம்பதிகளா பாக்க விரும்ப றேன்னு ரொம்பவே ஃபீல் பண்ணிட்டார்..."

"ஓ... பேசிட்டாரா சார்?"

"ஆமாம்... உயிரைக் கைல பிடிச்சிகிட்டுன்னு சொல் வாங்களே... அப்படி?"

"ஈஸ் இட் பாசிபிள் சார்?"

"அப்பா மேல பாசமிருந்தா அர்ச்சனா சம்மதிச்சுதானே தீரணும்?"

"ஆல் தி வெரி பெஸ்ட் சார்..."

"தேங்க்யூ... இந்த விஷயத்துல எனக்கு உன் உதவியும் தேவை..."

**"ஒருவேளை நீங்க சொல்ற மாதிரி அவர் யு.எஸ். போயிட்டு இருந்தாலும் விடமாட்டாங்க சார். இவங்க அங்க போய் அவர் எதிர்ல நின்னுடுவாங்க சார்..."**

"நான் என்ன சார் பண்ணணும்?"

"அர்ச்சனா கிட்ட எம்டி. உடம்பு ரொம்ப சீரியஸ்னு அடிக்கடி சொல்... அதேபோல அந்த விஷ்ணுவும் ஒரு அயோக்யன்னு அடிக்கடி சொல்..."

"சார்... பேக் ஃபயர் ஆயிட்டா?"

"ஆகாதபடி சொல்... நீ இப்படி பி.ஏ.வாகவே இருக்கப் போறியா... இல்லை குடோன் மேனேஜர் ஆக விருப்பமா?"

"நிஜமாவா சார்..?"

"இது என்னய்யா கேள்வி? அர்ச்சனா கன்ஸ்ட்ரக்‌ஷன்ஸுக்கு நான்தான் இனி எம்.டி..! என்னை மாப்பிள்ளை ஆக்கிக்கறதே அதுக்குத்தான். எம்டி. எல்லாத்தையும் என் கைல கொடுத்துட்டு ஸ்விட்சர் லாந்துக்குப் போய் செட்டில் ஆகற எண்ணத்துல இருக்கார்..."

"ஓ அப்படியா சார்..?"

"அப்படியேதான்... நான் சொன்னதை செய்..."

"யெஸ் சார்... இருந்தாலும் அர்ச்சனா

மேடம் எவ்வளவு தூரம் இதுக்கு ஒத்துவருவாங்கன்னு டவுட்டா இருக்கு சார். ஏன் சொல்றேன்னா இப்பகூட விஷ்ணு சார் பாபா கோவிலுக்கு வருவார்ங்கற நம்பிக்கைலதான் போயிருக்காங்க.

ஒருவேளை நீங்க சொல்ற மாதிரி அவர் யு.எஸ். போயிட்டு இருந்தாலும் விடமாட்டாங்க சார். இவங்க அங்க போய் அவர் எதிர்ல நின்னுடுவாங்க சார்... சினிமாவுலதான் சார் ரயில்லையோ, விமானத்துலயோ காதலன் பிரிஞ்சிட்டா காதலி ஏக்கத்துடன் காத்திருக்கற தெல்லாம்...! ரியல் லைஃப்ல காத்திருக்கிற வேலை எல்லாம் கிடையாது சார். யு.எஸ்ஸும் இப்ப நம்ப கொட்டிவாக்கம், பாலவாக்கம் மாதிரி ஆயிடிச்சே சார்..."

- பிரதாப் பேசப்பேச இந்திரஜித்துக்குள் கிர்ரடித்தது. கோபமும் கொப்பளித்தது...

"ஷட் அப்!"

"அவ யுஎஸ். இல்ல செவ்வா கிரகத்துக்கே போனாலும் அவனைப் பாக்க முடியாது. அதுல எனக்கு எந்த சந்தேகமும் கிடையாது. அவனுக்கும் அவன் மாமா பொண்ணுக்கும் இந்நேரம் கல்யாணம் முடிஞ்சி கல்யாணப் போட்டோவை அவன் அனுப்பியிருப்பான். அதைப் பார்த்தா கூடவா அர்ச்சனா மனசு மாறாது?"

- இந்திரஜித் உக்ரமாக ஆரம்பித்து பின் ஒரு நம்பிக்கை வயப்பட்டவன் போல் கேட்கவும் பிரதாப்பிடம் விழிப்பு!



**ம**காபலிபுரம் கடந்து கல்பாக்கத்தில் ஒரு கடலோர பங்களா! பங்களாவைச் சுற்றிலும் சவுக்குக் காடுகள். ஊடாக நெற்றி வகிடு போல ஒரு மண் பாதை! சக்கரங்கள் பதிந்த தடயத்துக்கு நடுவில் புற்கள் வளர்ந்து கிடக்க அந்த சக்கரத் தடயங்கள் ஒரு மண் இருப்புப் பாதைபோல் காட்சி தந்தது. அதனுள்தான் நுழைந்திருந்தது அந்த மினி வேன்!

பங்களா முன் நிற்கவும் வேனிலிருந்து இரண்டு பேர் இறங்கி நான்கு பெரிய கேரிபேக்குகளை சுமந்து கொண்டு உள்

சென்றனர்.

உள்ளே அங்கங்கே சிலர் சீட்டு விளையாடிக் கொண்டிருந்தனர். எல்லோருமே ஜீன்ஸ் பேன்ட், டி-ஷர்ட், அடர் புதர் தலை தாடி, கையில் வளையம், முகத்தில் எண்ணெய் பசை என்று ரவுடி இலக்கணம் மீறாமல் தென்பட்டனர்.

ஒரு இடத்தில் டி.வி. ஒன்றில் பலான படம் ஓடிக் கொண்டிருக்க அதை கூச்சமின்றி சில பெண்களுடன் அவர்கள் மடிமேல் கிடந்தபடியும் சிலர் பார்த்துக் கொண்டிருந்தனர்.

கேரிபேக்குகளுடன் வந்தவர்கள் தேஜா என்கிற அவர்கள் தலைவன் முன் சென்று பேக்கில் இருந்து பீர் மற்றும் மது பாட்டில்களுடன், பீட்சா பாக்ஸ் மற்றும் ஸ்நாக்ஸ் ஐட்டங்களை கடை விரித்தனர்.

தேஜா சுமாரான போதையில் இருந்தான். மற்றவர்கள் போல் ஜீன்ஸ் பேன்ட், டி-ஷர்ட் என்றில்லாமல் கறுப்பு நிறத்தில் பேன்ட்டும், முழுக் கை சட்டையும் அணிந்திருந்தான். கழுத்தில் விரல் பருமனுக்கு புலிநகச் சங்கிலி. கையில் பத்து பவுனுக்குக் குறையாத ப்ரேஸ் லெட்!

அப்போது அவன் கைபேசிக்கு ஒரு அழைப்பொலி, மறுமுனையில் ஒரு போலீஸ் கறுப்பு ஆடு!

"தேஜா ஒரு முக்கியமான விஷயம்..."

"என்ன?"

"கொஞ்ச நாளைக்கு சிலோன், சிங்கப்பூர்னு எங்கையாவது போய்டு..."

"ஏன்?"

"ஐ.ஜி. ஆபீஸுக்கே உன் மேல கம்ப்ளைண்ட் போயிருக்கு. ஒரு மினிஸ்டர் பிரெஷர் போட்டுருக்காரு உன்னை என்கவுன்ட்டர்ல போட்டுத்தள்ள முடிவெடுத்துட்ட

**"நாங்கள் ஆட்சிக்கு வந்தால் குடும்பத் தலைவிகள் சீரியல் பார்ப்பதற்காகவே தனி டி.வி. வழங்குவோம் என்பதை...."**

**- அ. ரியாஸ், சேலம்.**

மாதிரி தெரியுது. என்கவுன்ட்டர் ஸ்பெஷலிஸ்ட் அய்யப்பராஜ்கிட்ட ஒரு அசைன்மென்ட்டாகவே கொடுத்துட்டாராம் ஐஜி..."

"அந்த மினிஸ்டரோட காதலியை நான் காசு வாங்கிட்டுப் போட்டுத் தள்ளுனேன். அந்தாள் அதான் கம்ப்ளைண்ட் பண்ணிட்டான் போல...?"

"நீ ஏன் மினிஸ்டர் காதலின்னு தெரிஞ்சும் போட்டே?"

"லூஸ் மாதிரி பேசாதய்யா... எனக்குப் போட்டப்புறம்தான் தெரியும்! அந்த காதலி எனக்கு காசு கொடுத்தவன்கிட்ட கொஞ்ச

நாள் இருந்து அவன பத்தி மினிஸ்டருக்கும் தகவல் தந்திருக்கா.. அப்ப அவளை அவன் விட்டு வைப்பானா? எதிரிய விட துரோகி கொடுமையில்லையா?"

"இந்த நியாயமெல்லாம் யாருக்கு வேணும்? நான் சொல்லவேண்டியத சொல்லிட்டேன். சுதாரிச்சிக்கோ."

"நான் பாத்துக்கறேன். அந்த



அய்யப்பராஜ்தான் என் அடுத்த டார்கெட். அவனை கண்டந் துண்டமா வெட்டி ஒவ்வொரு பார்ட்டையும் உங்க டிபார்ட் மென்ட்டுக்கு தனித்தனி பார்சல்ல அனுப்பி வைக்கறேன் அப்ப தெரியும் இந்த தேஜா யாருன்னு.."

- போனை கட் செய்தான் தேஜா!

மீண்டும் ஒரு கைபேசி அழைப்பு. காதில் இந்திரஜித்.

"அச்சா பாஸ்.. என்னா பணம் ரெடியா?"

"பணத்தோடதான் வந்து கிட்டிருக்கேன். கல்பாக்கம் பங்களா தானே?"

"அங்கையேதான். சீக்கிரமா வாங்கோ பாஸ்... நானும் வேகமா இந்த பங்களாவை காலி பண்ணனும்.."

"ஏன்?"

"எல்லாம் தொழில் பொறாமை, போட்டிதான். நீங்க வாங்க. வந்து பேரமெல்லாம் பேசாதீங்கோ. நான் மனுஷனே கிடையாது, எமன்... எமன்கூட இல்ல... அவன் ஏறி வருவானே அது என்ன...? ஆங் எருமை.. பைசன்.. பைசன்.."

- தேஜா சொல்லிவிட்டு சிரித்தான். இந்திரஜித்துக்கு ஏன் பேசினோம் என்றாகிவிட்டது.

**கா**ரில் ஒரு கோடி கேஷுடன் ஏறி அமர்ந்துகொண்டு காரைக் கிளப்பிய நொடி இந்திரஜித்துக்கு இப்போது அழைப்பு!

புதிய எண்!

யாராக இருக்கும் என்கிற கேள்வியோடு காதருகே போனைக் கொண்டு சென்றான் இந்திரஜித்!

"ஹலோ இந்திரஜித்... நான் விஷ்ணு பேசறேன்!"

- என்றது மறுமுனை! விஷ்ணு வின் குரலேதான்..

யாரோ அள்ளையில் அரிவாளால் வெட்டியது போல் இருந்தது இந்திரஜித்துக்கு..

**(தொடரும்)**

# உயிர்ச் சிலிர்ப்பு



**இந்திரஜித் விஷ்ணுவின் குரலால் அதிர்ந்ததோடு அப்படியே நடுச்சாலை என்றும் பாராமல் காரை நிறுத்திய நிலையில் ஸ்தம்பித்தான்.**

உடனேயே காரின் பின்புறத்தில் இருந்து தேங்கிய கார்களின் ஹாரன் சப்தங்கள்…

'பாம்பாம்… கீய்ய்ங்..! பாம்..! கீய்ய்ங்…!' ஒரு முப்பது விநாடி தேவைப்பட்டது அந்த அதிர்விலிருந்து மீள. மீண்டு காரையும் ஓரமாக கொண்டு சென்று நிறுத்திக் கொண்டவன் கைகளில் கைபேசி டிஸ்கனெக்ட் ஆகாமலே இருந்தது!

மெல்..ல்..ல கைபேசியை காதருகே கொண்டு சென்றான் இந்திரஜித்!

"என்ன இந்திரஜித்… செத்து சாம்பலானவன் எப்படி பேசறான்னு ஆச்சரியமா இருக்கா?"

- காதில் வைத்த மறுநொடி திரும்ப ஒலித்தது விஷ்ணுவின் குரல்!

"இல்ல… நீ விஷ்ணு இல்லை… இது மிமிக்ரி வாய்ஸ்..! ஏய், யார் நீ..?" - பதறினான் இந்திரஜித்.



இந்திரா சௌந்தர்ராஜன்

"விஷ்ணு... உனக்கு சிம்ம சொப்பனமான அதே விஷ்ணுதான் பேசறேன் இந்திரஜித்..."

"நோ... நான் நம்பமாட்டேன். உன்னை எரிச்சு சாம்பலாக்கியாச்சு. அதை நானும் என் இரண்டு கண்களால பார்த்தேனே..."

"வீடியோவில தானே?"

"எதுல இருந்தா என்ன... நிஜமா நடந்தாதானே வீடியோவா எடுக்க முடியும்?"

"நல்லா மடக்கறியே. போகட்டும்... நான் என் உடம்பைதான் இழந்திருக்கேன்... ஆத்மாவை இல்ல! புரியுதா?"

"அப்படின்னா..?"

"என்ன அப்படின்னா... ஆத்மான்னா புரியாதா? ஆவின்னா தான் புரியுமா?"

"நோ... நீ பொய் சொல்றே! என்னை கொழப்ப பாக்கறே? யார் நீ? ஏன் இப்படி போன்ல பேசறே... நேர்ல வா!"

"போனுக்கே இப்படி பயப் படுறியே. நேர்ல வந்தா தாங்குவியா?"

"ஏய்... ஏய்... யார் நீ? உனக்கு எப்படி நான் விஷ்ணுவைக் கொல்லச் சொன்னது தெரியும்?"

"நான்தான் விஷ்ணுவோட ஆவின்னா அப்ப நீ நம்பமாட்டே... அப்படிதானே?"

"அது... அது... ஆவியால எப்படி போன்ல எல்லாம் பேச முடியும்?"

"ஏன் பேசமுடியாது... ஒருத்தர் உடம்புக்குள்ள புகுந்தா அந்த உடம்பு மூலமா பேசலாமே?"



"இல்ல... இல்ல... நீ இப்படி எல்லாம் பேசி என்னை மிரட்டவோ குழப்பவோ முடியாது. இது இருபத்தோராம் நூற்றாண்டு - விஞ்ஞான யுகம்!"

"ஹை...! மிரண்டுகிட்டே, குழம்பிக்கிட்டே அதைச் சொல்றியே இந்திரஜித்? ஆமா நான் தெரியாமத்தான் கேக்கறேன், உனக்கு நான் என்ன துரோகம் செய்தேன்..? இல்லை நம்ப நிறுவனத் துக்குத்தான் என்ன துரோகம் செய்தேன்? எதுக்கு இப்படி ஒரு கூலிப்படையை என் மேல ஏவி விட்டே..?"

"இதோ பார்... நீ விஷ்ணு இல்லை! எப்படியோ உண்மையை தெரிஞ்சிக்கிட்ட ஒரு கல்ப்ரிட்... உனக்கு என்ன வேணும்? பணம் தானே?"

"என்னப்பா சர்வர், கொத்து பரோட்டாகூட 'பொக்கே'வும் தர்றாங்க?"

"இது, 'பூங்கொத்து' பரோட்டா, சார்!"

- அப்ரோஸ் பானு, சென்னை.

“அப்ப நான் விஷ்ணுவோட ஆத்மான்னா நீ நம்பமாட்டே... அப்படிதானே?”

“நான் ஒரு போஸ்ட் கிராஜுவேட்! செத்தவன் ஆவியா வர்றதெல்லாம் கதைகள்லதான் சாத்யம். நிஜ வாழ்க்கைல அது சாத்யம்னா இந்த கொரோனாவுல அநியாயமா செத்துப்போன அவ்வளவு பேருமே ஆவியா வந்து அவங்க குடும்பங்களோட பேசியிருப்பாங்களே..?

அவ்வளவு ஏன்? செத்த ஆவிதான் அடுத்த கட்டம்னா இந்த நாட்டுல இப்ப வாழற வங்களவிட இறந்தவங்க எண்ணிக்கை மிக அதிகம். அப்படிப் பார்த்தா உயிருள்ள மனிதர்களைவிட உயிரில்லாத ஆவிகள்தான் இந்த உலகத்துல அதிகமிருக்கணும். அப்படியா இருக்கு?”

“பரவால்ல... உனக்குக் கூட லாஜிகலா கேள்வி கேட்கத் தெரிஞ்சிருக்கே!? போகட்டும், என்னை ஆவின்னு நீ நம்பவேண்டாம், ஒரு எக்ஸ்சுன்னே வெச்சுக்கோ... எனக்கு அதுல ஒண்ணும் ஆட்சேபணை இல்ல. ஆனா நீ இப்ப என்கிட்ட மாட்டிக்கிட்டு இருக்கிற ஒருத்தன். அதை மறுக்கமாட்டேன்னு நினைக்கறேன்.”



“அனேகமா நீ தேஜா கூட்டத்து ஆளாதான் இருக்கணும். அவங்கள தவிர யாருக்கும் இந்த விஷயம் தெரியாது. அதான் நீங்க கேட்ட பணத்தைக் கொடுத்துட்டேனே. தேஜா கூட கேட்ட பணத்தையும் தயாரா வைச்சிருக்கேனே... இன்னும் என்ன வேணும்? உனக்குத் தனியா பணமா?”

“அப்ப நான் தேஜா கூட்டத்து ஆள்... இதுதான் உன் முடிவா?”

“எக்ஸாக்ட்லி!”

“நான் இப்ப தேஜாவையும் அவன் கூட்டத்தையும் நீ கொல்லணும்னு சொல்லப் போறேன். நான் தேஜா ஆளா இருந்தா சொல்வேனா?”

“என்னது... நான் தேஜாவையும் அவன் கூட்டத்தையும் கொல்லணுமா?”

“நிச்சயமா. அவனும் அவன் கூலிப்படையும் இந்த பூமில வாழ எந்தத் தகுதியும் இல்லாதவங்க இந்திரஜித்!”

“ஏய்... என்ன நீ என்னென்னமோ சொல்றே... விளையாட்றியா?”

"நீதான் என் அழகான வாழ்க்கையோட விளையாடிட்டே இந்திரஜித். எனக்கு ஸ்போர்ட்ஸ்ல எல்லாம் பெரிய இன்ட்ரஸ்ட் கிடையாது."

"போதும்.. போதும்.. நீ இப்படியே பேசிக்கிட்டே போனா நான் என் போனை ஸ்விட்ச் ஆஃப் பண்ணிடுவேன். அப்ப என்ன செய்வே நீ?"

"நேர்ல வருவேன்டா.."

"பந்தியில வாழை இலைக்கு பதிலா இவருக்கு வெத்தலை விரிச்சிருக்காங்களே?"
"மொய் ரொம்ப கம்மியா வைச்சாராம்!"
– எம்.இராஜேந்திரன், லால்குடி.

"அப்படி வா வழிக்கு... நேர்ல வா... எதுவா இருந்தாலும் பேசி தீத்துக்குவோம்.."

"பேசி தீர்க்க எல்லாம் எதுவுமில்லை இந்திரஜித்! நான் சொல்றத நீ கேட்டுத்தான் தீரணும். உனக்கு வேற வழியே கிடையாது. முதல்ல தேஜாவோட கூட்டம், அப்புறம் தேஜா! அதுக்கும் பிறகு உனக்கு எல்லாமுமா இருக்கற உன் மாமா

"அந்தப் பயிற்சி வகுப்பு அதுவரை தங்கள் வாழ்வில் கண்டிராத அனுபவங்களை அவர்களுக்கு அளித்தது. அதில் முதலான ஒரு விஷயம் அமைதியை உணர்தல்!

பிறந்தது முதல் வாழ்ந்து முடித்து மடியும் வரை உறக்கத்தின் இடையே நள்ளிரவில் கண்விழிக்கையில் ஒரு அமைதியை உணர்ந்திருப்போம். அப்போது சுவர் கெடிகார விநாடி முள் சப்தம் கூட துல்லியமாக கேட்கும். அதற்கு மேலான ஒரு அமைதிக்கு நம் காதுகள் பழகியிருக்கவில்லை. ஆனால், குருதேவ் ரங்கநாத் பட்டாச்சார்யா எது உண்மையில் அமைதி என்பதை அந்த ஆசிரமத்தில் அவர்களுக்கு உணர்த்திக் காட்டினார்.

ஒரு மலை அடிவாரத்தில் தட்டையான நிலப்பரப்பில் சுற்றுச்சூழல் எனப்படும் 360 டிகிரியில் 5 கி.மீட்டர் வட்டச் சுற்றளவுக்கு ஒரு குடிசை கூட இல்லாத வெற்று நிலப்பரப்பில் செல்போன் டவர்களோ, மின்கம்பங்களோ கூட இல்லாத இயற்கைச் சூழலில் நள்ளிரவில் எல்லோரையும் எழுப்பி தியானம் புரியச் சொன்னபோதுதான் அந்த அமைதியை அவர்களும் உணர்ந்தனர்.

அப்படி ஒரு நிலையில் சாதாரண இரு பசும்புல் துண்டுகளை கையில் எடுத்து ஒன்றின் மேல் ஒன்றை உரசி, "இந்த சப்தம் துல்லியமாக கேட்பதற்காகவே நேற்றைய பயிற்சியில் உங்கள் காதுக்குரும்பை எனும் மெழுகு வெளியேற மூலிகைச் சாற்றினை எல்லோருக்கும் விட்டேன். இப்போது உங்கள் உள் சப்தங்களை நன்றாக கேளுங்கள். கேட்டுவிட்டு அதை உங்களுக்கு தெரிந்த விதத்தில்

விளக்குங்கள்," என்றார்.

விஷ்ணு தியானத்தின் ஆழ்ந்த நிலையில் இதயத் துடிப்பை வேகமாக ரசித்தான். மேற்கத்திய இசையில் ஒரு வாத்தியக் கருவி 'தப் தப்' என்று சப்தம் எழுப்பியது ஞாபகத்துக்கு வந்தது. அதே போல் வயிற்றுக்குள் உணவு செரிப்பது, வாணலியில் காய் வேகும்போது புகை கசிய ஒலிக்கும் சொய்ய்ங் சப்தம் போல இருந்தது. சிறுநீரகம் சொட்டுச் சொட்டாய் தன்னுள் நீரைச் சேகரிப்பதுகூட விநாடி முள் சப்தம் போல கேட்டது. பட்டாச்சார்யா விடம் ரசனையுடன் அதை விளக்கினான்.

"விஷ்ணு இப்போதுதான் உள்முகமாக உன் உடலை பார்க்கத் தொடங்கி இருக் கிறாய். இந்தப் பார்வை உயிர்ப்புள்ளியைப் பார்க்கும்வரை தொடரவேண்டும். நீ இதை விட்டுவிடக்கூடாது," என்றார் பட்டாச்சார்யா.

"அந்த உயிர்ப்புள்ளி எப்படி இருக்கும்?" என்று கேட்டான் விஷ்ணு.

"கட்டை விரல் பருமனில் ஒரு அழலாடும் தீப ஒளி போல் கபால ஓட்டுக்கும் இரு காதுகளுக்கும், மூக்கின் நுனிக்கும், பின் கபாலத்துக்கும் இடையே உள்ள வெற்றிடத்தில் ஒரு விளக்கு போல் அது ஒளிர்ந்து கொண்டிருக்கும்," என்றார்.

"அதுதான் உயிரா? அதுதான் உடம்பின் ஒட்டுமொத்த இயக்கத்துக்கும் காரணமா?"

"ஆம்... அது எரிந்தால் உயிர்! அணைந்தால் சாவு... உடம்பு நசிந்தாலும் அதை அணையாமல் பார்த்துக் கொள்ள முடியும். தேவை பயிற்சி. இதில் வல்லவர் சித்தர்களில் திருமூலர், அரசர்களில் விக்ரமாதித்தன்!" என்றார்.

கிஷன்லால் இவங்களை எல்லாம் நீ உன் கையால நான் சொல்ற மாதிரி கொலை செய்தே தீரணும்."

"வாட்...?" - காருக்குள் இந்திரஜித் கிட்டத்தட்ட ஒரு கிரிக்கெட் பால் நுழையுமளவிற்கு வாயைப் பிளந்துவிட்டான்!

அப்போது கார் கதவு ஒரு டிராஃபிக் போலீஸ் தட்ட, காரின் கண்ணாடியை இறக்கியவன் போனை விலக்கிக்கொண்டு, "ஸாரி சார்... இப்ப எடுத்துடுறேன்," என்றபடியே திரும்ப



காரை ஸ்டார்ட் செய்தான்.

சிறிது தூரம் சென்று ஆளரவம் இல்லாத ஒரு பெரிய வாதநாராயண மரத்துக்குக் கீழே காரை நிறுத்திவிட்டு, செல்போனை மெல்ல காதருகே கொண்டு சென்றான்.

காத்திருந்தது போல் திரும்ப ஒலிக்கத் தொடங்கியது குரல்!

"குட்.... மரத்தடிக்கு வந்து சந்தடியில்லாதபடி காரை நிறுத்திட்டே... அப்புறம், நான் சொன்னதை மறந்துடாதே. நல்லா

"அழகிய 'வேல்' விழியாளே, உன் பார்வை 'அம்பு'களால் என்னைத் துளைக்காதே!"
"என்னை வர்ணிக்க மட்டும்தான் ஆயுதங்களைப் பயன்படுத்துவீர்களா, பிரபு?!"
கே.லக்ஷ்மணன்,
திருநெல்வேலி-11.

கேட்டுக்கோ... ஐ திங்க் இப்ப நீ தேஜாவைப் பார்க்கத்தான் போய்கிட்டிருக்கே. சரியா? போ... பணத்தை எல்லாம் அநாவசியமா கொடுத்து வேஸ்ட் பண்ணிடாதே. நான் சொல்றபடி நடந்துக்கிட்டா அவனையும் அந்தக் கூட்டத்தையும் அப்படியே அந்த கல்பாக்கம் பங்களாவோட பரலோகத்துக்கு அனுப்பிடலாம்.

போலீஸும் ஏதோ கோஷ்டிச் சண்டை - அதுல தேஜாவோட கூட்டம் ஒழிஞ்சிச்சுன்னு சந்தோஷப்பட்டு தேஜா குரூப்போட ஃபைலையே குளோஸ் பண்ணிடும். அதுதான் இப்ப எனக்கும் வேணும்..."

- விஷ்ணு என்று சொல்லிக் கொண்ட குரல் மிகக் கூலாக சொல்லி முடித்தது. இந்திரஜித்துக்கோ பேச்சே வரவில்லை.

"என்ன இந்திரஜித் இந்த ட்விஸ்ட்டை நீ எதிர்பார்க்கல இல்லை?"

"ஏய்... ஏய்... யார் நீ? ஏன் இப்படி எல்லாம் சொல்றே?"

"ஏன் சொல்றேனா... நீதானே பணத்தைக் கொடுத்து என்னை, ஸாரி விஷ்ணுவைக் கொல்லச் சொன்னே?"

"இதோ பார்... உனக்கு எவ்வளவு பணம் வேணும்... கேளு தர்றேன்! என் வரைல எல்லாம் இப்ப கூடி வந்துகிட்டிருக்கு. தேஜா கேட்ட பணத்தைக் கூட நான் ரெடியா வைச்சிருக்கேன். உனக்கும் கொடுக்கறேன். யார் நீ? எவ்வளவு பணம் வேணும் உனக்கு?"

"என்னைதான் ஒரு எக்ஸ்ன்னு வைச்சுக்க சொல்லிட்டேனே... எத்தனை தடவ இதையே கேட்பே? அப்புறம் உன் பணம் யாருக்கு வேணும்? இப்ப நான் எல்லா உண்மைகளையும் அர்ச்சனாகிட்ட சொன்னா போதும்... உன் நிலைமையை கொஞ்சம் யோசிச்சுப் பார்... அந்த வீடியோ போலீஸுக்குப் போனா? உன் நிலையை நினைக்கவே முடியல!"

"ஐய்யோ ப்ளீஸ்... அதை மட்டும் செய்திடாதே! உன்னை நான் கெஞ்சிக் கேட்டுக்கறேன்..."

"நான் பதிலுக்கு உன்கிட்ட கெஞ்சியெல்லாம் கேட்க மாட்டேன். எல்லாமே உத்தரவு தான்! நீ இன்னிக்கு தேஜாவையும், அவன் கூட்டத்துல இருக்கற அவ்வளவு பேரையும் போட்டுத்

தள்றே. எந்த கையால போன் பண்ணி கொலை செய்யச் சொன்னியோ அதே கையால அவங்களை அழிச்சு பரிகாரம் பண்ணிடு! உன்னை மன்னிக் கறத பத்தி நான் யோசிக்கறேன்."

"அது- அது எப்படி முடியும்? அவன் எதுக்கும் அஞ்சாதவன்.. நூத்துக்கணக்கான பேரை பணத்துக்காக போட்டுத் தள்ளினவன்..."

"அதனாலதான் அவனை உன் கையால போட்டுத் தள்ளச் சொல்றேன். உன் கிட்ட பணம் இருக்கற தாலயும் அவன்கிட்ட கத்தி கவடா இருக்கறதாலயும் கொலையை ஒரு தொழிலாவே ஆக்கிட்டவன் இனியும் இருக்கலாமா?"

"என்ன நீ.. ஒரு நக்சலைட் மாதிரி பேசறே?"



"ஓ.. நியாயமா நடந்துக்க சொல்றவன் நக்சலைட்டா? அப்ப உன்னை என்னன்னு சொல்லலாம்?"

"ப்ளீஸ்.. இப்படி எல்லாம் என்னை மிரட்டாதே. எனக்கு அவ்வளவு தைரியமெல்லாம் கிடையாது.."

"நீ, உன் அங்கிள், அப்புறம் உன்னைப் போல கூலிப்படையை நம்பி இருக்கற எல்லாருமே வடிகட்டின கோழைகள்னுதான் எனக்கு நல்லா தெரியுமே.."

"அப்புறம் எப்படி என்னால செய்யமுடியும்?"

"முடியும்... நான் சொன்ன மாதிரி நடந்துகிட்டா அதிகபட்சம் அரை மணி நேரத்துல முடிச்சிடலாம்."

"எ.. எ.. எப்படி? பாம் கிம் வைக்க சொல்வியா?"

"நிறைய சினிமா அப்புறம் டிவி. சீரியல் பாத்து பாத்து இதை நல்லா தெரிஞ்சி வைச்சிகிட்டிருக்கே.. எப்படின்னு நானே நேர்ல வந்து சொல்றேன். அப்ப கேட்பே தானே?"

"நேர்ல வந்தா..?"

"ஆமாம்... கொஞ்சம் திரும்பிப் பின்னால் பார்.. நான் வர்றது தெரியும் உனக்கு.. நான் எக்ஸ் இல்லே ஆவின்னும் தெரியப் போகுது பார்.."

"நிஜமாவா?" - என்று கேட்டபடியே திரும்பிப் பார்த்த இந்திரஜித்துக்குத் திக் கென்றது. பிரதாப்தான் போன் பேசியபடி நடந்து வந்து கொண்டிருந்தான்!

**(தொடரும்)**

# உயிர்ச் சிலிர்ப்பு

இந்திரா செளந்தர்ராஜன்

பிரதாப் நடந்து வருகிற விதம் அச்சு அசல் விஷ்ணு நடந்து வருவது போலவே இருந்தது! நெருங்கி வந்த பிரதாப்பும் இந்திரஜித்தை கேட்காமலே காருக்குள் ஏறி அமர்ந்தான்.

ஏறி அமர்ந்த விதத்திலும் விஷ்ணுதான் தெரிந்தான்!

இந்திரஜித்துக்குள் குழப்பம். பார்த்தான்!

"என்ன பாக்கறே.. காரை எடு - நான் சொல்ற இடத்துக்கு ஓட்டு.." - அச்சு அசல் விஷ்ணுவுடைய குரலில் பிரதாப் பேசவும் இந்திரஜித்துக்குள் குழப்பம் தன்னை பத்தால் பெருக்கிக்

கொண்டது. சமாளித்து "பிரதாப்... நீ..." என்று அவனை கேள்வி கேட்க முனைவதற்குள் -

"நான் இப்ப பிரதாப் இல்லை... பிரதாப்புக்குள்ள புகுந்து கிட்டிருக்கிற விஷ்ணு..." என்கிற பதில் இந்திரஜித்தைப் படபடக்க வைத்தது!

'நோ... இல்லை... இது என்ன கூத்து... நான் நம்பமாட்டேன்...' - என்று இந்திரஜித் உள்ளுக்குள் நினைத்தாலும் பேச்சில் அது வரமுடியாதபடி ஓர் அழுத்தம். இருந்தும் இந்திரஜித் முயன்றான்.

"பிர... பிரதாப்... நீ... நீ...!"

"நான் விஷ்ணு... உன்கிட்ட கொஞ்சம் முந்தி போன்ல பேசின விஷ்ணு... உன்னால கூலிப்படையால கொலை செய்யப்பட்ட அதே விஷ்ணு..."

- படு உக்ரமாய் வெளிப்பட்டன வார்த்தைகள்.

இந்திரஜித்திடம் கண்களில் அதிகபட்ச விரிவு... கழுத்தில் ஸ்ப்ரே செய்தார்போல் வியர்வை...

"இல்ல... நான் நம்பமாட்டேன்... பிரதாப் நீ என் சர்வன்ட். எப்படியோ சில உண்மைகளை தெரிஞ்சிக்கிட்டு நீ என்னை பிளாக் மெயில் பண்ணப் பாக்கறே..."

- என்று திக்கித் திணறி பேசிமுடித்தான்.

"காலைலதானே எங்கம்மாகூட சண்டை போட்ட! மறுபடியும் என்ன சத்தம்?"

"நம்ப முடியலியா? நம்ப முடியாதுதான்... ஆடி கார்ல உக்காந்துக்கிட்டு ஆப்பிள் போன்ல பேசிக்கிட்டு ஆனந்தமா ஒரு விஞ்ஞான வாழ்க்கை வாழற உன்னால நம்ப முடியாதுதான்!

ஆனா மவனே நீ நம்பித்தான் தீரணும். உனக்கும் எனக்கும் மட்டுமே தெரிஞ்ச பல விஷயங்களை வரிசையா சொல்லவா? அப்ப நம்புவியா? இல்லை, ஒரு ஆவியோட சக்தி எப்படிப்பட்டதுன்னு காட்டவா?"

- அதட்டலாகக் கேட்டது மட்டுமல்ல கார் டேஷ் போர்டு மேல வைக்கப்பட்டிருந்த டிஷ்யூ நகர ஆரம்பித்தது. இந்திரஜித்துக்குள் உதறலும் கூடத் தொடங்கியது.

"என்ன... நம்ப முடியலையா? டிஷ்யூ பேப்பர் காத்துல நகர்ந்ததா நினைக்கறியா... உனக்குள்ள இப்ப நுழைஞ்சு உன் மண்டையை நீயே உடைச்சுக்க வைச்சி ஆவியாட்டம்னா என்னன்னு காட்டட்டுமா?"

வெகு காட்டமுடன் விஷ்ணுவாகிய பிரதாப் கேட்கவும் அதற்குமேல் இந்திரஜித்தும் அவனோடு மோதத் தயாரில்லை."

"இப்ப... இப்ப... நான் என்ன செய்யணும்?" என்று ஒரு வழியாக கேட்டான்.

"அப்படி வா வழிக்கு. ஏண்டா - கைல கோடிக்கணக்குல பணமிருந்தா என்ன வேணா செய்வியோ?"



"நீ... நீ எதை சொல்றே?"

"காரை எடு... மகாபலிபுரம் கடற்கரைக்கு விடு. அங்க ஒரு குறிப்பிட்ட இடத்துலதான் என் உடம்பை எரிச்சு சாம்பல் ஆக்கினாங்க. அந்த இடத்துக்குப் போ..."

"எ... எதுக்கு இப்ப அங்க?"

"போறியா இல்லியா?"

"போறேன்... போறேன்..."

"எடு காரை..."

- ஏதோ துப்பாக்கி முனையில் ஒருவரை மிரட்டுவதுபோல் விஷ்ணுவாகிய பிரதாப் மிரட்ட, காரும் கிளம்பியது. ஆனால் இந்திரஜித்தால் அந்த பழைய சரளமுடன் ஓட்ட முடியவில்லை. கார் பல இடங்களில் வளைந்து குலுங்கியது. அதுவே அவன் பயத்தில் சிக்கிவிட்டதை விஷ்ணுவாகிய பிரதாப்புக்கும் உணர்த்தியது.

"உப்ப தின்னா தண்ணி குடிச்சிதான் தீரணும் இந்திரஜித்! எருமையா வந்து காரை வழி மறிச்சது நான்தான்! அந்த எருமையை விலக்க வந்தப்ப இந்த பிரதாப் உடம்புல புகுந்ததும் நான்தான்!

நான் குருநாதர் ரங்கநாத பட்டாச்சார்யா கிட்ட யோகம் கற்றவன்! உடம்போட ரகசியத்தை விஞ்ஞானபூர்வமாகவும் தெரிஞ்சவன், மெய்ஞானபூர்வமாகவும் அறிஞ்சவன்!



"இது, ரெண்டாவது அலை!"
- கிணத்துக்கடவு ரவி.

சாதாரண மனுஷனோட உயிர்தான் உடம்பை பிரிஞ்ச நிலைல கர்மகாரியங்களுக்குத் தகுந்த மாதிரி அடுத்த கட்டத்தை அடையும். ஒரு யோகியோட உயிர் அப்படி கிடையாது. அது தன்னிச்சையா செயல்படும். அதுமட்டுமல்ல நான் ஒரு கார்ப்பரேட்மேனா இருந்தாலும் மனசளவுல ஒரு யோகியாகவும் வாழ்ந்தவன். அதனாலதான் செத்த பிறகும் உன் கூட என்னால இந்த உடம்பு மூலமா பேச முடியுது.

வாஸ்தவத்துல நான் உனக்குள்ள புகுந்து அர்ச்சனாவோட வாழறதாதான் இருந்தேன். அதைப் பிறகு பாத்துக்கலாம். இப்ப அதுக்கு முன்னால செய்ய வேண்டிய பல காரியங்களை செய்துடுவோம்னுதான் உன்னை விட்டு வைச்சிருக்கேன்..."

- ஓடும் காருக்குள் விஷ்ணுவாகிய பிரதாப் பேசப் பேச இந்திரஜித்துக்குள்ளும் சற்றுத் தெளிவு. இதெல்லாம் இந்திரஜித் கற்பனையில்கூட நினைத்துப் பார்த்திராத விஷயங்கள்.

சில நேரங்களில் வாழ்க்கை இப்படி சில அதிசயங்களை நிகழ்த்திக் காட்டிவிடும். இதை அனுபவிக்க மட்டும்தான் முடியும். பிறரிடம் சொல்லி நிரூபிக்கவெல்லாம் முடியாது.

இந்திரஜித்துக்கு ஒன்று மட்டும் புரிந்தது. தான் வசமாக மாட்டிக் கொண்டுவிட்டோம் என்பதே அது!

**க**டற்கரை!

அலைகளிடம் அடங்காத கும்மாளம். காற்றிடம் ஈரக் குளுமை - கரையோரமாய் நண்டுக் குஞ்சுகளின் குழி புகும் விளையாட்டு...

விஷ்ணுவாகிய பிரதாப் இந்திரஜித்துடன் வந்து நின்ற இடத்தில் அவர்கள் இருவர் கால்களையும்

"திருமூலரையும், விக்கிரமாதித்தனையும் உயிர் ரகசியம் அறிந்தவர்களாக பட்டாச்சார்யா சொல்லவும் 'ஏன் அதன்பின் ஒருவர்கூட அதுபோல் தோன்றவில்லை?' என்கிற கேள்வி விஷ்ணுவுக்குள் எழுந்தது. அதை கேள்வியாகக் கேட்கவும் செய்தான்.

"நல்ல கேள்வி... ஆனால் இந்தக் கேள்வியை இப்படி கேட்கக் கூடாது? இவர்களைப் புரிந்துகொண்டு பின் கேள்வி எழுப்ப வேண்டும்," என்றார் பட்டாச்சார்யா.

"புரிந்து கொண்டு என்றால்?"

"இருவருமே கருணை மிகுந்தவர்கள், துளி சுயநலமும் இல்லாதவர்கள்... குறிப்பாக அச்ச உணர்வே என்னவென்றும் அறியாதவர்கள்! மேலினும் மேலாய் ஒரு தெய்வ சகாயம் இவர்களுக்கு கூரை போல் இருந்து கைகொடுத்தது. திருமூலருக்கு சிவபெருமான் என்றால், விக்கிரமாதித்தனுக்கு காளிதேவி! அப்படி தெய்வ சகாயம் நமக்கிருப்பது அவசியம். ஏனென்றால் எப்போதும் ஒரு பாதிதான் நம் கையில்... மறுபாதி மேலுள்ள விண் கையில் என்பதை மறந்துவிடக் கூடாது. இந்த ஒரு பாதிக்குள்தான் ஒருவன் தன்னம்பிக்கை, தன்முனைப்பு என்று எல்லா பரிசோதனைகளையும் செய்யமுடியும். மறுபாதி அப்படி அல்ல..."

"அப்படியானால்?"

"அந்த மறுபாதியை புரிய முயலுங்கள். நம் உடல் இயக்கமே அந்த மறுபாதி சார்ந்ததுதான்...

ஒவ்வொரு விநாடியும் நம் உடலில் ஒரு செல் மடிந்து ஒரு செல் பிறந்து நாம் மாறியபடியே இருக்கிறோம். இதை தடுத்து நிறுத்த முடியுமா?"

"முடியாது. அதற்கும் உயிர் ரகசியத்துக்கும் என்ன தொடர்பு?"

"உயிரோட்டத்தால்தான் இதுவே நடக்கிறது. அந்த உயிரோட்டம் உடல் சார்ந்தது... பின் மனம் சார்ந்தது!"

"அப்படியானால் உயிரோட்டம் நின்றால் மனஓட்டமும் நின்று விடுமா?"

"நல்ல கேள்வி... மன ஓட்டம் என்பது சப்தத்தால் ஆனது! சப்தம் சொற்களால் ஆனது. சொற்கள் அறிவாலானது! அறிவாலான சொற்களால் ஆன சப்தம் மட்டும் அழிவதேயில்லை! உடம்பு மாற்றங்களுக்குள்ளாகி அழிந்துவிடும். சப்தம் சிதையாது அப்படியே இருக்கும்.

அந்த சப்த வடிவத்தின் இன்னொரு பெயரே ஆத்மா! இந்த ஆத்மா ஒரு உடம்பு தான் இயங்க பயன்படாத நிலையை அடையும்போது, மரணம் கண்டு தனக்குத் தோதான அடுத்த உடலைத் தேடி அடைந்துவிடும்.

அதுவாய் அடைவது ஒருவிதம்!

அதை விளங்கிக் கொண்டால் நாமே அதை இயக்கி எந்த உடம்பிலும் புகலாம். புகுந்து இயங்கலாம்!"

- பட்டாச்சார்யாவின் நெடிய விளக்கம் புரிந்தது போலவும் இருந்தது. குழப்பமாகவும் இருந்தது!



அலைகள் மோதித் தழுவி விட்டு சரே லென்று சரிந்து பின்சென்றன.

"கடற்கரை அழகா இருக்குல்ல...?"' விஷ்ணுவாகிய பிரதாப் மெல்லக் கேட்டான்.

"அ... ஆமாம்..."

"அர்ச்சனாவோட பல தடவை வந்திருக்கேன். அப்பல்லாம் எனக்குத் தெரியாது - என் முடிவு இங்கதான்னு..."

- சொல்லிக் கொண்டே மிக தீர்க்கமாய் கோபம் பூசிய கண்களோடு இந்திரஜித்தைப் பார்த்தான்.

இந்திரஜித்தின் குடல் பாகத்தில் முறுக்குகள் விழ ஆரம்பித்தன.

"இந்திரஜித்! உலகத்துல மனிதன் பிழைக்கத்தான் தொழில்னு ஒண்ணு தோன்றியது. அது மனுஷன் வாழறதுக்காக உருவான ஒண்ணு- ஆனா அதையே வைச்சு ஒருத்தன் மனுஷனை அழிக்கறது எவ்வளவு பெரிய கொடுமை... இல்ல?"

- விஷ்ணுவாகிய பிரதாப் கேட்ட விதமே அலாதியாக இருந்தது.

"அ... ஆமா... ஆமா..." - திக்கித் திணறலோடு ஒப்புக் கொண்டான் இந்திரஜித்!

"இப்ப இங்க ஒத்துக்குற நீ பணத் திமிருல அந்தத் தொழிலை நம்பின ஒருத்தன் தானே?" "நா.. நான் இல்ல.. அ.. அங்கிள்தான் உன்னை கூலிப் படையை வைச்சு கொல்லச் சொன்னார்..."

"உனக்கு நீ துணைய சேர்த்துக் கறியா? அவருக்கும் உனக்கும் அந்த அளவு உங்க ஸ்டேட்டஸ் பெருசு... இல்ல..?"

"இல்ல... தப்புதான்! தப்புதான்!" - கைகள் நடுங்க படபடத்தான் இந்திரஜித்.

"இப்ப நீ ஆயிரம் தடவை கூட மன்னிப்பு கேட்பே! ஆனா எனக்கு அதெல்லாம் வேண்டாம் இந்திரஜித்.. நான் போன்ல சொன்ன மாதிரி இன்னும் 1 மணி நேரத்துல அந்த தேஜா, அவனோட கூலிப் படைல எல்லாரும் செத்தாகணும். அதுல தேஜா உடம்பை நீ இங்க தூக்கி வந்து போட்டு அவன் எனக்கு நெருப்பு வெச்ச மாதிரி அவனுக்கு நீ நெருப்பு வைக்கணும்... அதை நான் பாக்கணும்."

"அய்யோ... அது எப்படி என்னால முடியும்?"

"என் பேச்ச கேட்டா எல்லாம் முடியும்."

"சினிமாவுல கூட இது சாத்தியமில்ல. அவன் இதுவரை ஆயிரம் பேருக்கு மேல காசுக்காக கொலை செய்திருக்கான். அவன் ரொம்ப பயங்கரமானவன்..."




"சினிமாவுக்கு சாத்திய மில்லாமப் போகலாம். ஆனா என் வரைல அது சாத்தியம். சாத்தியமே இல்லைன்னு நீ நினைக்கற ஒரு ஆவியா நான் ஆயிட்டத பார்த்துமா நீ லாஜிக்கா யோசிக்கறே?"

"பி... பிரதாப் என்னை விட்று..."

"பிரதாப் இல்ல நான்.. விஷ்ணு..."

"சாரி... விஷ்ணு என்ன விட்று..."

"நான் சொன்னதைச் செய்... விட்டுடறேன்..."

"முடிஞ்சா செய்துடுவேன்... ஆனா அவனை எப்படி தனி ஒரு ஆளா நான் கொல்ல முடியும்? அதுவும் அவன் கூட்டத்தையே...?"

"முடியும்."

"என்னால முடியாது. ஆனா ஆவியான உன்னால முடியலாம்."

"அது எனக்கும் தெரியும். ஆனா இந்த பிரதாப் பாவம்-கோர்ட் ஆவி கொலை செய்ததுங்கறது ஏற்காது. பிரதாப்பை ஒரு கொலை காரனாத்தான் பார்க்கும்."

"என்னையும் அப்படித் தானே பார்க்கும்?"

"எப்ப கொலை செய்ய பணம் கொடுத்தியோ அப்பவே நீயும் கொலைகாரனாயிட்டே! இந்த விஷயத்துல தேஜாகூட ஒரு அம்புதான் - ஏவினவன் நீ! யோக்யன் மாதிரி நடிக்காதே..."

"நான் நடிக்கல... நிஜமா உள்ளதைப் பேசறேன். என் குற்றத்தைக் கூட நான் ஒத்துக்கறேன். அதுக்காக என்னை தேஜாகிட்ட அனுப்பாதே. அது என்னால முடியாது."

"முடியும்..."





"முடியுமா... எப்படி?"

"அப்படி கேள்..." - என்ற விஷ்ணுவாகிய பிரதாப் தன் பாக்கெட்டில் இருந்து ஒரு சிறு பொட்டலத்தை வெளியே எடுத்தான். அதில் பத்து கிராம் சயனைட்!

"இது சயனைட்! அவனுக்கு பார்ட்டி கொடுக்கற சாக்குல பிராந்தி விஸ்கில இதை கலந்துடு. எல்லாருக்கும் உன் கையாலயே கொடு... அதிகபட்சம் 15 நிமிஷத்துல அவ்வளவு பேரும் கிளம்பிடுவாங்க.

அப்புறமா தேஜாவை தூக்கி கார்ல போட்டுக்கிட்டு இங்க வா. நான் இங்கேயே காத்திருப்பேன்!"

விஷ்ணுவாகிய பிரதாப் சொல்லி முடித்திட இந்திரஜித்திடம் ஒரு பிரமை பிடித்த நிசப்தம்!

**(தொடரும்)**




ந்திரஜித்தின் நிசப்தத்துக்கு நடுவே அலைகளிடம் மட்டும் ஹோவென்ற இரைச்சல்! காலடியில் சரேல் சரேல் என்கின்ற வீச்சல்... ஒரு கோடி ரூபாய் பணத்தைக் கொடுத்து மேலும் சிலரை கொலை செய்ய சொல்வதுதான் அவன் திட்டம். அதில் மிக முக்கியமான இரண்டு பேர் விஷ்ணுவின் அப்பா, அம்மா!



அதற்காகத்தான் புறப்பட்டான். ஆனால் அவனே இப்போது கொலைகாரனாக வேண்டும்! இது

எப்படிப்பட்ட ஒரு திருப்பம்?

அந்தத் திருப்பத்தில்தான் இந்திரஜித்திடம் இப்போது நிசப்தம்... இல்லையில்லை, ஸ்தம்பிப்பு!

"என்ன யோசனை... புறப்படு. ஒரு மணி நேரத்துல இப்பவே அஞ்சு நிமிஷம் முடிஞ்சிடிச்சு. இன்னும் 55 நிமிஷங்கள்தான் இருக்கு..."

- விஷ்ணுவாகிய பிரதாப் துரிதப்படுத்தினான்.

இந்திரஜித் ஸ்தம்பிப்பிலிருந்து ஆமைத்தனமாக விலகி வெறித்தான். அதைக் கண்ட விஷ்ணுவாகிய பிரதாப் செல்போனை கையில் எடுத்து டி.எஸ்.பி.க்கு போன் செய்யத் தயாரானான்.

"ஈஸ் திஸ் டிஎஸ்பி. ஆபீஸ்?" என்று கேட்ட மறுவிநாடி, ஓடி வந்து செல்போனை பிடுங்கி ஸ்விட்ச் ஆஃப்பும் செய்தான் இந்திரஜித்!

"இந்த பயம்தான் இப்ப எனக்கும் வேணும்... அதேசமயம் உனக்கு இந்த பயம் என்கிட்ட மட்டும் தான் இருக்கணும். தேஜா குரூப்பை கொலை செய்யறதுல இருக்கக்கூடாது..." என்றான்.

"அது வந்து பிரதாப்..."

"ம்... விஷ்ணுன்னு கூப்பிடு..."

"சரி விஷ்ணு... சயனைடை அங்க எப்படி அவங்க எதிர்லயே நான் கலக்கமுடியும்?"

"இப்படி எல்லாம் எல்.கே.ஜி. பாயாட்டம் கேட்காதே. போகும் போதே கலந்து எடுத்துக்கிட்டு போ... உன் கையாலயே ஊத்திக் கொடு. வேணும்னா நான் உதவி செய்யறேன்."

"எல்லாரும் ஒரே சமயம் குடிப்பாங்கன்னு எப்படி சொல்ல முடியும்? முன்ன பின்ன குடிச்சு, முதல்ல குடிச்சவன் சுருண்டு விழுறத பார்த்து மத்தவங்க சுதாரிச்சிட்டா...?"

"அப்ப அவங்கள உன் கையாலயே கொலை செய்."

"விஷ்ணு..."

"வளவளன்னு பேசாம புறப்படு. யார் வேகமா குடிக்கிறாங்களோ, அவங்களுக்கு பத்தாயிரம்னு சொல். அவ்வளவு பேரும் போட்டி போடுவாங்க. போயும் சேருவாங்க!

அந்த ஈவு இரக்கமே இல்லாத

கொலைகார கும்பல்ல ஒருத்தன் உயிரோட இருந்தாலும் சரி, நீ தொலைஞ்சே... உனக்கு நான் வழியை காட்டிட்டேன். அதுல நீ சரியா நடக்கலன்னா அப்புறம் சித்ரவதையை அனுபவிப்பே நல்லா ஞாபகம் வெச்சிக்கோ..."

விஷ்ணுவின் அதாவது பிரதாப் ஆகிய விஷ்ணுவின் கட்டளைக் குரலைத் தொடர்ந்து தான் வந்த காரை நோக்கி நடந்தான் இந்திரஜித்!

நல்ல உச்சி வெயில்! காலடியில் நிழல் ஒண்ணரை அடி சுருக்கத்தில் இருந்தது. பிரதாப்பாகிய விஷ்ணுவும் பின்தொடர்ந்தான். அவன் காரில் ஏறவும் இவனும் ஏறினான்.

"நீ... நீயும் கூட வரப்போறியா?"

"பின்ன?"

"நான் எங்கையாவது ஓடிப் போயிடுவேன்னு சந்தேகப் பட்றியா?"

"நீ எங்க போனாலும் அங்க வந்து நான் உன் முன்னால நிப்பேன். நான் சாமான்ய மனுஷன் இல்ல இந்திரஜித்! பஞ்சபூதங்களை ஆட்டிப் படைக்க முடிஞ்ச ஆத்மா-ஆவி! அப்படியே போனா நீ எங்க போவே... தாய்லாந்து இல்ல பட்டாயாவுக்குத்தானே? நீ சந்திர மண்டலத்துக்கே போனாலும் அங்க நான் வந்து நிப்பேன்!"

கார் புறப்பட்டது. வழியில் ஒரு மதுபானக் கடை முன் நிறுத்தப் பட்டு உயர் ரக, ஒரே மாதிரியான விஸ்கி பாட்டில்கள் வாங்கப்பட்டன. காருக்குள் வைத்து அவற்றில் சயனைடும் கையுறையோடு பாதுகாப் பாக சிட்டிகை சிட்டிகையாய் கலக்கப்பட்டது. பின் அவ்வளவும் ஒரு அட்டைப் பெட்டிக்குள் அழகாய் அணி வகுத்து அடங்கின.

திரும்பவும் காரில் ஓட்டம்! சவுக்குக் காட்டுப் பகுதிக்குள் மண் சாலையில் பிரவேசித்து, பங்களா முன்னால் நின்றது. நூறு மீட்டருக்கு முன்பே ஒரு வளைவில் கார் வளையும்போது பங்களா மாடியில் இருந்த ஒருவன் டெலஸ்கோப் வழியாகப் பார்த்து தேஜாவுக்கும் தகவல் சொல்லிவிட, கார் வருவதில் தடையேதுமில்லை.

காரை விட்டு இந்திரஜித் ஒரு கோடி ரூபாய்க்கான பிரீஃப்கேஸுடன் இறங்கிட,

பிரதாப் ஆகிய விஷ்ணு மது பாட்டில்கள் நிரம்பிய அட்டைப் பெட்டியை எடுத்துக் கொண்டு இறங்கினான்.



இருவரையும் அழைத்துச் செல்ல வந்த ஒருவன் இது என்ன அட்டைப் பெட்டி என்பது போல் பார்க்க,

"ஃபாரீன் சரக்கு... இன்னிக்கு என் கையால உங்க எல்லாருக்கும் பார்ட்டி..." என்று தயங்கித் தயங்கி பேசினான் இந்திரஜித்!

அதைக் கேட்ட அவன் கண்களில் வோல்டேஜ் கூடிய ஒரு பிரகாசம். ஒரு சந்தோஷச் சிரிப்பும் கூட...! அது கடைசி சிரிப்பு என்பது தெரியாமலே அவர்களை அழைத்துக் கொண்டு முன்னால் நடந்தான் அவன்.

அங்கிருந்து புறப்படும் முஸ்தீபில் கண்ணில் பட்ட அவ்வளவு பேரும் மூட்டை கட்டிக் கொண்டிருந்தனர். மினரல் வாட்டர், கேன்கள், சிப்ஸ் பாக்கெட்டுகள், சிகரெட் துண்டுகள் என்று கண்டதெல்லாம் காலிலும் கண்ணிலும் பட நடந்தான் இந்திரஜித்... பின்தொடர்ந்தான் பிரதாப்பாகிய விஷ்ணு.

மையமாய் ஒரு பெரிய ஹால்! அங்கே அழுக்கேறிய சோபாக்கள். அதில் ஒன்றில் அமர்ந்திருந்தான் தேஜா- மூவரும் வரவும் நிமிர்ந்தான். உதட்டில் சிகரெட் அவன் நிமிர்ந்த

"உடம்பையும் மனதையும் தெளிவாகப் புரிந்துகொண்டால் அதை நாம் ஆட்டுவிக்கலாம். இல்லாவிட்டால் அது நம்மை ஆட்டுவிக்கும், நாமும் ஆடியாக வேண்டும்! லட்சம் பேரில் ஒருவன்தான் தன் உடம்பையும், மனதையும் புரிந்தவனாக இருக்கிறான். புரிவது என்பது ஒரு தியரியைப் போல... தியரியைப் பயன்படுத்தி செயல்புரிவதில்தான் எல்லாம் இருக்கிறது. அப்படி செயல்புரிந்தவர்களில் சிலர்தான் ராமகிருஷ்ண பரமஹம்சர், பகவான் ரமணர் போன்றோர். இருவருமே உடம்பளவில் புற்றுநோயால் பாதிக்கப்பட்டவர்கள்! ஆனால், அதற்காக கவலை கொள்ளாமல், தன் உடம்பில் அதுவும் ஓர் அங்கம் என்று கருதினர். தனது முன் கர்மத்தாலும், தன் முன்னோர்களின் கர்ம வினைகளாலும் அது வந்ததை அவர்கள் வரவேற்று, ஒரு சந்தோஷத்தை அனுபவிப்பது போலவே அதன் வலியை அனுபவித்து தீர்த்தனர். மருத்துவர்கள் மருந்து கொடுக்க முன்வந்தபோது அதை முதலில் மறுத்தனர். 'இந்தப் புற்று எவ்வளவு தூரம்தான் வலிக்கும் என்று நான் பார்க்கிறேன்... என்னை விட்டுவிடுங்கள்' என்றார் ரமணர்.

ஒரு சராசரி மனிதனால் கற்பனையில்கூட இப்படி சொல்ல முடியாது. காலில் ஒரு முள் தைத்துவிட்டால் 'முள் வந்து குத்திவிட்டது'

வேகத்தில் வெந்து தணிந்திருந்த அரை அங்குல நீள சாம்பல் உதிர்ந்து சிதறியது.

"வாங்க பாஸ்... வாங்க... நீங்க புறப்பட்ட வேகத்துக்கு எப்பவோ வந்திருக்கணும். ஏன் இவ்வளவு லேட்?" என்று பிரதாப்பைப் பார்த்தபடியே கேட்டான்.

"வழில... வழில நமக்கெல்லாம் சரக்கு வாங்கப் போனேன். அதனால கொஞ்சம் லேட்டாயிடிச்சு..."

"இங்க எங்ககிட்ட இல்லாத சரக்கா? ஆமா என்ன திடீர்னு எங்க மேல பாசம்?"

"பாசமெல்லாம் ஒண்ணுமில்ல... ஒரு சந்தோஷம்! அதான்..."



"சந்தோஷமா... போன்ல பேசும்போது அப்படி தெரியலியே? என்னை போட்டுத்தள்ள பம்பாய் தாதாவுக்கெல்லாம் போன் பண்ணியிருக்காரு உங்க மாமா... இப்ப வந்து சந்தோஷம்னா எப்படி பாஸ்...?"

- தேஜா கூர்மையாகத்தான் கேட்டான். இந்திரஜித் பதில் சொல்லத் திணறியபடி பிரதாப்பை பார்த்தான். விஷ்ணுவாகிய பிரதாப்புக்கும் புரிந்தது. மிக வேகமாய் சமாளிக்கத் தொடங்கினான்.

"என்ன சார்... மாமாவையே போட்டுத் தள்ளிட்டு அவர் மகளையும்

என்று அதன் மேல் பழி போட்டுப் பேசுவோம். உண்மையில், அது இருந்த இடத்தில் நாம்தான் காலை வைத்திருப்போம்.

இப்படிப்பட்ட நமக்கு உடம்பின்மேல் ஆதிக்கம் செலுத்திய ரமணர், ராமகிருஷ்ண பரமஹம்சர் போன்றோர் எல்லாம் அதிசயங்களே!"

- பட்டாச்சார்யா உடல் குறித்தும் உயிர் குறித்தும் தொடர்ந்து அளித்த விளக்கத்தின் இடையே அங்கிருந்த நூறு பேரில் விஷ்ணு மட்டுமே கேள்வி கேட்பவனாக இருந்தான்.

"குரு... இவ்வளவு தெரிந்த நீங்கள் உங்கள் உடம்பை உங்கள் கட்டுப்பாட்டில் வைத்துள்ளீர்களா? ஆம் என்றால் அதை எங்களுக்கு நிரூபிப்பீர்களா?"

அடுத்த நொடியே, "நான் இறந்து அதை நிரூபித்துக் காட்டுகிறேன். ஆனால் அதை நீங்கள் ஓர் அதிசயமாகக் கருதி என்னை தெய்வமாக்கி விடக் கூடாது. ஏனென்றால் நீங்கள் முயன்றால் உங்களுக்கும் அது சாத்தியம். சாத்தியமாகும் சகலத்தையும் செயல்படுத்துபவர்கள் மகான்கள். ஆனால் அவர்களாலும் ஒரு விதையை, ஏன் ஒரே ஒரு நெல்லை கூட உருவாக்க இயலாது. அது இறைவனுக்கே சாத்தியம்!" என்றார் பட்டாச்சார்யா.

விஷ்ணு அவர் கேட்ட உறுதியை உடனே அளித்தான். அவரும் தன் மரணத்துக்குத் தயாரானார்!

கட்டிகிட்டு அவரோட அவ்வளவு சொத்துக்கும் வாரிசாகப் போற விஷயத்தை பாஸ் சும்மா சொல்லுவாங்களா..? இவர் கேட்ட கேள்வியிலையும் நியாயமிருக்குல்ல..?"

- என்று பிரதாப் எடுத்துக் கொடுக்கவும் தேஜாவுக்கே அந்தப் பேச்சால் கிர்ரடித்தது.

"என்னது... உங்க மாமனையே போட்டுத் தள்ளறதா? பாஸ் இது என்ன ட்விஸ்ட்டு..?"

"அதான் ட்விஸ்ட்டு... அவருக்கு எங்க பாஸ் உங்க கிட்ட வந்ததே பிடிக்கல. நீங்க சுண்டெலியாம்! அவருக்கு பம்பாய்ல பல சிங்கம் புலிகளையே தெரியுமாம். உங்ககிட்ட வந்து தப்பு பண்ணிட்டாராம்..."

- என்று தன் பேச்சை வலுப்படுத்தினான் பிரதாப்.

"ஆமா நீங்க யாரு சாமி?"

"நான்... நான்... பிரதாப். எம்டி யோட பி.ஏ... இனி இந்த பாஸுக்கு பி.ஏ..."

"அச்சா... விசயம் அப்படிப் போவுதா? அப்ப உங்க பாஸையும் போட்டுத் தள்ளணுமா?"

"ஆ... ஆமா தேஜா..." - என்று தலையசைத்தான் இந்திரஜித்.

"அவ்வளவுதானா... இல்லை இன்னும் இருக்காங்களா?"

"இன்னும் சிலர் இருக்காங்க. அதை நான் போகப் போக சொல்றேன்..."

"சரி, பணத்தை முதல்ல கொடுங்க... எல்லாம் சரியா இருக்குதானே?"

"எண்ணிப் பார்த்துக்கோ தேஜா..."

"கை வெயிட்லயே சொல்லிடு வேன். எத்தன பெட்டி வாங்கி யிருப்பேன் இப்படி..." என்றபடியே பெட்டியை வாங்கிய தேஜா, அதை எடை போட்டுப் பார்ப்பதுபோல் ஒரு பாடிலாங்வேஜ் காட்டி, அப்படியே தூக்கி அருகிலிருந்த ஆள் ஒருவனிடம் கொடுத்தான்.

விஷ்ணுவாகிய பிரதாப் பார்வையோ தேஜா மேலேயே இருந்தது.

"ஆமா... அதான் பல பெட்டி வாங்கிட்டீங்களே? இன்னும் எதுக்கு இந்தத் தொழில்?" - தன் பார்வையை சற்று சாந்தப்படுத்திக் கொண்டே கேட்டான் பிரதாப்பாகிய விஷ்ணு.

**“ தேஜா, உன் ஆட்கள எல்லாம் வரச் சொல்லேன்... ஆளுக்கு ஒரு பாட்டில்... யார் வேகமா குடிக்கறாங்களோ அவங்களுக்கு பத்தாயிரம் கேஷ்... ”**



"இதை எல்லாம் என்னால விட முடியாது. நான் புலி வாலைப் பிடிச்சவன். சகஜமா உங்கள மாதிரி எல்லாம் சொஸைட்டில வாழ முடியாது. என்னைக் கொல்ல, நான் செஞ்ச கொலைங்களால பாதிக்கப்பட்டவங்க மட்டுமில்ல, போலீஸும் அலையுது. நமக்கெல்லாம் எங்கேயும் எப்பவும் அண்டர் கிரவுண்ட்தான்..."

- என்ற தேஜா மேஜை மேல் பிரதாப் வைத்த அட்டைப் பெட்டியைத் திறந்து ஒரு பாட்டிலையும் வெளியே எடுத்தான். அதைத் திறந்து குடிக்கப் போனவனை தடுத்த பிரதாப்,

"தேஜா, உன் ஆட்கள எல்லாம் வரச் சொல்லேன்... ஆளுக்கு ஒரு பாட்டில்... யார் வேகமா குடிக்கறாங்களோ அவங்களுக்கு பத்தாயிரம் கேஷ்..." என்றான்.

"அட... குடிக்கறதுல போட்டியா? என்ன பாஸ் விட்டா எங்களுக்கு பூஜை கூட பண்ணுவீங்க போல இருக்குதே?" - என்று கிண்டலாய் சொன்ன தேஜா,

"டேய் எல்லாரும் வாங்கடா..." என்று குரல் கொடுக்கவும், ஒரு கூட்டம் கூடியது. எல்லோருக்கும் இந்திரஜித்தே தன் கையால் பாட்டிலை எடுத்துக் கொடுத்தான். கொடுக்கும்போது கை நடுங்கியது.

மொத்தமாய் பதின்மூன்று பேர்! இருபது பாட்டில்கள் இருந்ததில் ஏழு மீதம் இருந்தது.

"டேய்... பாஸ் இப்ப நமக்கு பார்ட்டி கொடுக்கறாரு. அதுக்குதான் இந்த சரக்கு. பாஸுக்கு இனிமேதான் நம்ம தயவும் தேவைப்படப் போகுது. அதான் நம்மோட ஐக்கியமாயிட்டாரு. எல்லாரும் பாஸுக்கு ஒரு ஜே போட்டுட்டு குடிங்க. ஏக் தம்ல குடிச்சு முடிச்சா பத்தாயிரம் கேஷாம்! ஒருத்தன் கூட விடக்கூடாது..." என்று தேஜா தான் மட்டும் குடிக்காமல் பாட்டிலை கீழே வைத்துவிட்டு, "ரெடி ஸ்டார்ட்..." என்றான்.

இந்திரஜித்துக்கு கால்கள் அப்போதே நடுங்கத் தொடங்கி விட்டன.

**(தொடரும்)**

13 வார தொடர்

# இந்திரா செளந்தர்ராஜன்

மர்மத் தொடர் 10

நடுங்கிய இந்திரஜித் அடுத்து பிரதாப்பைத்தான் பார்த்தான். தேஜாவின் கைத்தடிகள் மளமளவென்று குடிக்கத் தொடங்கியிருந்தனர்! ஆனால் தேஜா அதைக் குடிக்காமல் ரசித்தான்.

"பணம் தரப்போறார் பாஸ்னா உடனேயே என்னா வேகம் பார்றா..." என்று சற்று குதூகலித்தான்.

ஆனால் தேஜா குடிக்கவில்லை. அவனுக்கான பாட்டில் திறந்த நிலையில் அருகிலேயே இருந்தது.

பிரதாப் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருக்க, தேஜாவுக்கு அப்போது பார்த்து போன் வரவும் சற்று எழுந்து விலகிச் சென்றான்.

இதற்குள் குடித்தவர்கள் இடையே சற்று தடுமாற்றம். சிலர் மதுவை உமிழ்ந்து கொண்டே ஏதோ கசப்பு மருந்தைக் குடித்தவர்களைப் போல முகபாவங்களுக்கு வந்திருந்தனர். இந்திரஜித் பிரதாப்பை நெருங்கி, "நாம இப்ப தேஜாகிட்ட வசமா மாட்டப் போறோம்... தேஜா குடிக்கல பாரு..." என்றான் படபடப்பு குறையாமல்.

அப்போது விஷ்ணுவாகிய பிரதாப், வேகமாய் ஒரு காரியம் செய்தான்.



பாக்கெட்டிலிருந்து கைத்துப்பாக்கி ஒன்றை எடுத்தவன் அதை இந்திரஜித் கையில் வைத்து அழுத்தினான்!

"ஐயோ.. என்ன இது துப்பாக்கி..?"

"தேஜா பொணமா கிடக்கறதை விட உயிரோட கிடைச்சா அதுவும் நல்லதுதான்... செத்த பிறகு அவனுக்கு நெருப்பு வைச்சா எரிச்சல் தெரியவா போகுது? அதே உயிரோட இருக்கும்போது வைச்சா ரொம்ப நல்லாருக்கும்ல?"

"ஏய்.. என்ன சொல்றே நீ?"

"தேஜாவை துப்பாக்கி முனைல மடக்கு.. எல்லாம் உன் மூலமாவே நடக்கணும். அதுக்கு முந்தி இவங்க சாகறத கொஞ்சம் கண்குளிர பார்ப்போம்.." என்ற விஷ்ணுவாகிய பிரதாப், அந்த அடியாட்கள் கூட்டத்தைப் பார்க்கவும், அவர்கள் சுருண்டு விழுந்து நெளியத் தொடங்கியிருந்தனர்.

"இவங்கள்ல ஒருத்தன்கூட தப்பப் போறதில்ல. தேஜா மட்டும்தான் மிச்சம்... அவனையும் இந்த துப்பாக்கி முனைல மடக்கு.."

"ஐயோ... என்னால முடியாது.."

"உனக்கு வேற வழி இல்ல இந்திரஜித். நீ இப்ப இந்தத் துப்பாக்கிய பயன்படுத்தத் தவறினா அவன் உன்னை போட்டுத் தள்ளிடுவான். போய்ச் சேர விருப்பமா?"

- விஷ்ணுவாகிய பிரதாப் கேட்க, அடியாட்களில் சிலர் நெஞ்சைப் பிடித்துக்கொண்டு முனகத் தொடங்கியிருந்தனர்.

"இளவரசி பல்லக்கு பின்னால் ஏன் இளைஞர்கள் கூட்டம் அலையுது?"

"பல்லக்கு பக்கத்துல 'வை ஃபை' கிடைக்குதாம்!"

**- அம்பை தேவா, சென்னை.**

அதற்குள் செல்போனில் பேசிவிட்டு வந்திருந்த தேஜாவிற்கு பகீரென்றது.



வாயில் நுரை தள்ள சகாக்கள் சுருண்டு விழுந்து நெளிவதைப் பார்த்தவன் அடுத்து இந்திரஜித்தைத் தான் மிக வேகமாகப் பார்த்தான். பார்வையிலும் அனல்!

இந்திரஜித்தும் தாமதிக்கவில்லை. சட்டென்று துப்பாக்கியை நேருக்கு நேர் நீட்டினான்.

தேஜாவிடம் அடுத்தகட்ட அதிர்ச்சி.

"தேஜா.. அசையாதே.."

"ஹே... என்ன பாஸ்... என்ன இது தில்லாலங்கடி வேலை..?"

"எப்படி வேணா சொல்லிக்கோ. உனக்கு உதவி செய்ய இப்ப யாரும் கிடையாது. உன் கூட்டமே சயனைட்



கலந்த விஸ்கியால காலி!"

"இது நம்பிக்கைத் துரோகம்..."

"அதை எல்லாம் ஒழுங்கா வாழுற நல்லவங்க சொல்லணும்... கொலையை தொழிலாக்கிக்கிட்ட நீ சொல்லக்கூடாது."

- இந்திரஜித்தின் உயிர் பயம் தெளிவாக அவனை பேசச் செய்தது. தேஜா பேச்சோடு குறுக்கில் பாய்ந்து கைத்துப்பாக்கியைத் தட்டிவிட முனைந்தபோது, வேகமாக விலகி அவனை நோக்கிச் சுட்டதில் தேஜா தோள்பட்டையில் குண்டு பாய்ந்து கீழே அலறலுடன் விழுந்தான்.

"தேஜா... ஒழுங்கா பேச்சைக் கேட்டு நட... இல்ல இப்பவே இங்கேயே நீ காலியாயிடுவே..."

"பாஸ்... உன் பணக்கார புத்தியைக் காட்டிட்டே பாத்தியா?" - வலியோடு கர்ஜித்தான் தேஜா.

"பேசாதடா... எழுந்திரு..."

"என்னை என்ன செய்யப் போறே?" என்று தேஜா தோள்பட்டையில் கை வைத்து ரத்தக்கசிவை வருடிக் கொண்டே கேட்டான். அவன் உடம்பெல்லாம் தந்திக்கம்பி போல் நடுக்கம்.

"அதை நான் சொல்றேன்..." என்று அதுவரை வேடிக்கை பார்த்த விஷ்ணுவாகிய பிரதாப் பேசினான்.

தேஜாவிடம் திகைப்பு.

"என்ன பாக்கறே..?"

தேஜா விழித்தான்.

"நீ உயிரோட சித்ரவதைப்பட்டு சாகப்போற தேஜா. மனித உயிர்களை காக்கா குருவியை வேட்டையாடுற மாதிரி வேட்டையாடிக் கொன்ன உனக்கு அந்த வலி எப்படிப் பட்டதுன்னு தெரிய வேண்டாமா?"

"இல்ல- இல்ல... என்னை விட்ரு... என்னை எதுவும் செய்துடாதே..."

"இப்படி எத்தனை பேர் உன்கிட்ட கெஞ்சி இருப்பாங்க?"

"என்கிட்ட இருக்கற எல்லா பணத்தையும் உனக்குத் தந்துடறேன். என்னை தயவுசெய்து விட்ரு..."

"விட்றதுக்காகவா துணிச்சலா இப்படி சயனைட் கலந்த மது பாட்டிலோட வந்தோம்?"

"வேண்டாம்.. வேண்டாம்... ப்ளீஸ்..."

"இந்திரஜித் இனி பேச்சு இல்லை- கார்ல பெட்ரோல் கேன் இருக்கு.

போய் எடுத்துக்கிட்டு வா. அந்தத் துப்பாக்கியை இப்படி கொடு..."

விஷ்ணுவாகிய பிரதாப் துப்பாக்கியை வாங்கிக் கொண்டு தேஜாவுக்கு எதிராக நீட்ட இந்திரஜித் வெளியே ஓடிப் போய் காரில் இருந்து பெட்ரோல் கேனை எடுத்து வந்து நின்றான்.

"அந்த நாய் மேல ஊத்தி தீ வை.." - விஷ்ணுவாகிய பிரதாப் நரம்புகள் புடைக்க கத்தினான். ஆனாலும் இந்திரஜித்திடம் தடுமாற்றம். அடுத்த நொடி துப்பாக்கி முனை இந்திரஜித் பக்கம் திரும்பவும் இந்திரஜித்தும் செயல்படத் தொடங்கினான்.

தேஜா அருகில் இருந்த மேஜை அடிக்குள் போய் படுத்துக்கொள்ள முயன்றான். அவன் மேல் பெட்ரோல் வீச்சலாய் விழுந்து அவனை தழுவிக் கொண்டது. மேஜை மேலெல்லாம் விழுந்து பரவியது.

"உம் சுமான்... உன் கையாலேயே தீ வை..."

"வேண்டாம்... வேண்டாம்..."

-தேஜாவின் அலறலால் ஒரு பயனுமில்லை. இந்திரஜித் தன் கையாலேயே தன் சிகார் லைட்டை பற்றவைத்து அவன் மேல் வீசி எரிந்தான்.



**யோ**க வதன வகுப்பு நடத்தப்படுகிற அந்த வனமும், வனமில்லாததுமான நிலப்பகுதியே ஓர் அசாதாரணம். ஒரு சிறு பட்சியின் சப்தம்கூட இல்லாத நிசப்த மான கூடாரங்களும் குடிசைகளுமாக இருந்தது அந்த ஆசிரமப் பகுதி. அதில் பட்டாச்சார்யாவின் குடில், மிகுந்த தனித்தன்மையோடு இருந்தது. ஓர் ஆளுயர நிலைக் கண்ணாடி முன் கம்பீரமாக ஆறு சுடர் குத்துவிளக்கெரிய.. அதன் ஒளியை கண்ணாடி பிரதிபலித்ததில் அறை முழுக்க மெல்லிய மஞ்சள் பூசிய வெளிச்சம்.. ஊடாக அத்தர் வாசம்!

இதன் இடையில்தான் சவாசனத்துக்கு தயார் ஆனார் பட்டாச்சார்யா. முன்னதாக நூறு பேரையும் அவரவர் குடில்களுக்குச் சென்று அங்கே இருக்கச் சொல்லிவிட்டார்.

தன் குடிலின் குத்துவிளக்கு முன் பாயை விரித்து அதில் விஸ்ராந்தியாக நிமிர்ந்து படுத்தவர் ஒரு பிணம் போல சவாசனம் புரியத் தயாரானார். அவரோடு எப்போதும் உடனிருக்கும் உதவியாளர் ஸ்ரீவத்சவா முகத்தில் ஒருவித கலவரம்.

"என்ன வத்சவா அச்சமாக இருக்கிறதா?"

"ஆம் ஸ்வாமி... இப்படி ஒரு சோதனை அவசியம்தானா?"

"சோதித்தால்தானே சொன்னவை எல்லாம் கற்பனையோ யோகமோ அல்ல என்பது தெளிவாகும்."

"பிறகு சீடர்களும் இதுபோல் முயன்று குளறுபடி ஆகிவிட்டால் என்ன செய்வது?"

"அப்படி எல்லாம் நடக்காது. சவாசனம் புரிந்து ஆத்மாவை விடுவிப்பது அவ்வளவு சுலபமில்லை. காற்று பற்றிய ஞானம் மிக மிக தேவை. காற்றை தச வாயுவாகப்

குபீர் என்று பற்றிக் கொண்டது நெருப்பு. தேஜா உருண்டு புரள ஆரம்பித்தான். நெருப்புக் கோளம் ஒன்று இங்கும் அங்கும் உருளுகிற மாதிரி இருந்தது. இந்திரஜித்திடம் ஸ்தம்பிப்பு. பிரதாப் தன் செல்போனால் அங்கு நடந்ததை வீடியோ எடுத்தபடியே துப்பாக்கியை பாக்கெட்டில் போட்டுக்கொண்டு ஒரு பார்வை பார்த்தான். அத்தனை அடியாட்களும் விரைத்து



பிணமாகக் கிடந்தனர்.

தேஜா பிணமாகி எரிந்து கொண்டிருந்தான்! அதைப் பார்த்த விஷ்ணுவாகிய பிரதாப்பின் கண்களில் ஒரு பெரும் நிறைவு.

இந்திரஜித்தோ நொறுங்கிப் போயிருந்தான். மெல்ல அந்த ஒரு கோடி சூட்கேஸை தேடி எடுத்துக் கொண்டு வந்து நிமிர்ந்தான்.

பின் வெளியே வந்து காரில் ஏறிக் கொண்டு இருவரும் புறப்பட்டனர். வழக்கம்போல் இந்திரஜித்தான்



பார்த்து அதில் எந்த வாயுவுக்கு என்ன பணி என்றறிந்து அந்த ஞானத்தோடு அதை அணுகி செயலாற்ற வேண்டும். அதற்கு முன் உடல் உறுப்புகள் பற்றிய அறிவும் அதன் குணம், செயல் பற்றிய தெளிவும் மிக முக்கியம். அதெல்லாம் ஒருவருக்கு வசப்பட அவர் முழு யோகியாக, யோக வாழ்வு மட்டுமே வாழ்பவராக இருக்க வேண்டும்.

நான் அப்படி ஒரு வாழ்வு வாழ்வதும், வாழ்ந்துகொண்டிருப்பதும் உண்மையெனில் இன்று என் ஆத்மா உடல் விடுதலை அடைவதும், வேறொரு கூடு புகுவதும் மிக இலகுவாக நடந்தேறும்.

ஞானானந்தகிரி சுவாமிகள் இப்படித்தான் ஒரு ஆட்டின் உடலுக்குள் புகுந்தவராக சிறிது திரிந்தார். அதை காஞ்சி மஹா சுவாமிகள் மட்டுமே கண்டறிந்தார். இன்று அப்படி என்னை எத்தனை பேர் கண்டறிகின்றனர் என்றும் பார்க்கிறேன்!" என்ற பட்டாச்சார்யா அதன்பின் சவாசனத்தில் ஆழ்ந்தார்.

உடல் மெல்ல தளர்ந்து சுவாச கதியில் ஏறி இறங்கிய வயிற்றுப் பரப்பும் மெல்லத் தழைந்து ஒரு கட்டத்தில் அப்படியே நின்று போயிற்று. ஸ்ரீவத்சவா குனிந்து உடலைத் தொட்டபோது விரைத்து பட்டாச்சார்யா சவமாகவே ஆகிவிட்டிருந்தார்! முன்னமே திட்டமிட்டது போல டாக்டர் ஒருவர் வந்து நாடித்துடிப்பை பரிசோதித்து "நாடி அடங்கிவிட்டது. ஆனால் உடல் சூடு தணியாதது வியப்பைத் தருகிறது!" என்றார்.

டாக்டர் வரையில் பட்டாச்சார்யா உயிர் இப்போது அந்த உடலில் இல்லை! என்றால் அது எங்கே போயிற்று?

காரை ஓட்டினான்.

காருக்குள் பெரும் நிசப்தம்!

கார் அந்த சவுக்குக் காட்டு சூழலை விட்டு வெளியே வந்து சென்னை-பாண்டிச்சேரி சாலைக்குள் நுழைந்து சென்னை நோக்கி ஓடத் தொடங்கியது. இந்திரஜித் திடீரென்று காரை சாலையோர மரத்தடி ஒன்றில் ஓரம்கட்டி நிறுத்திவிட்டு, மெல்ல பின்னால் திரும்பி விஷ்ணுவாகிய பிரதாப்பைப் பார்த்தான். குளித்தது போல் வியர்த்திருந்தது உடல்.

"என்ன பாக்கறே?"

"நடந்ததெல்லாம் கனவா இல்ல நிஜமான்னு யோசிக்கறேன்..."



"நீ எப்படி வேணா யோசிச்சுக்கோ. அதேசமயம் நான் சொல்றதை எல்லாமும் இனி நீ செய்தாகணும்..."

"விஷ்ணு என்னை விட்டுடு... எனக்கு இப்பவே ஒரு மாதிரி படபடன்னு இருக்கு... தேஜாவுக்கு என் கையாலயே நான் நெருப்பு வைச்சதை நினைச்சாலே நெஞ்சு நடுங்குது..."

"அதை நான் என் செல்போன்ல வீடியோ எடுத்திருக்கேன் பாக்குறியா?"

"ஐயோ... இது வேறையா?"

"அதானே உன் ஸ்டைல்? நான் வெறுத்துப் போய் என் மாமா பெண்ணோட யுஎஸ். போய்ட்டதா ஒரு டூப் வீடியோ போட்டு என் அர்ச்சனாவோட நிம்மதியை கெடுத்தியே, அவளுக்கு எப்படி இருந்திருக்கும்?"

"விஷ்ணு..."

"என்ன விஷ்ணு..? நானும் அந்த தேஜா கருகி எரிஞ்ச மாதிரிதானே செத்தேன்... அப்ப எனக்கு எப்படி இருந்திருக்கும்?"

"ஐயோ, நான் ஏதோ திமிர்ல செய்துட்டேன். உன் கால்ல எத்தனை தடவை வேணா விழறேன். என்னை விட்டுடு. நான் இந்த நாட்டை விட்டே ஓடிப் போயிடுறேன்..."

"போயிட்டா நான் வாழ்ந்துடுவேனா?"

"இந்த பிரதாப் உடம்புல இருந்துகிட்டே வாழ முடியாதா உன்னால?"

"அப்ப பிரதாப்போட வாழ்க்கை?"

"விஷ்ணு... இப்ப என்னை என்ன செய்ய சொல்றே?"



"ஒரு கொலைகார கூட்டம் ஒழிஞ்சது! அது அழிஞ்சதுலே போலீஸ்"க்கும் நிம்மதி. அடுத்து அழிய வேண்டியது உன்னை ஏவி விட்ட உன் மாமா... அதாவது என் முதலாளி... மிஸ்டர் கிஷன்லால்!"

"அப்ப அவரை நான் கொல்லணுமா?"

"எக்ஸாக்ட்லி... அதுக்காக ஆஸ்பத்திரில இருக்கற அவரை அங்க வெச்சே ஏதாவது ஊசி போட்டே கொன்னுடலாம்னு மட்டும் நினைக்காதே. தேஜா கூட்டம் செத்ததை எப்படி என் கண்ணால பார்த்தேனோ அப்படி அவரும் துடிச்சு துடிச்சு சாகணும். நான் பக்கத்துல இருந்து பாக்கணும். தேஜாவை கொன்ன மாதிரியே அவரை நீ கொல்லணும். அவர் கதறணும்..."

"ஐயோ இது கொடுமை... தேஜா கூட ஒரு கொலைகாரன். அவனைக் கொன்னதுல ஒரு சின்ன சமாதானம் எனக்கு இருக்கு. ஆனா என் மாமா..."

"நீயும் சரி... உன் மாமாவும் சரி. தேஜாவை விட மோசமானவங்க. உங்கள மாதிரி ஆட்களாலதான் தேஜாவே வளர்ந்தான். அவன் காரியம்னா, நீங்கதான் காரணம்!"

- விஷ்ணுவாகிய பிரதாப் எதிரில் இந்திரஜித் விழி இரண்டும் தெரித்துவிடுமளவு மிரண்டு போய் விழித்தான். பின் மிக மெல்ல "அவரும் போய்ட்டா அப்புறம் அர்ச்சனாவோட நிலை...?" என்று குரல் கமறக் கேட்டான்.

"அர்ச்சனா நல்லா இருப்பா... ரொம்ப சந்தோஷமாவும் வாழ்வா... நீ அதை பார்த்துட்டுதான் சாகணும். அதுதான் இப்ப என் விருப்பம்!" என்றான் மிக நிதானமாக.

'விஷ்ணுவும் இல்லாமல், தானும் மணக்காமல், மாமாவும் போய்விட்ட நிலையில் அர்ச்சனாவால் எப்படி சந்தோஷமாக வாழமுடியும்?'

இந்திரஜித் தனக்குள் எழுப்பிய கேள்வியோடு விஷ்ணுவாகிய பிரதாப்பை திரும்பவும் வெறிக்க, பிரதாப்பும் சொன்னான்.

"அர்ச்சனா அவ விரும்பின சந்தோஷமான வாழ்க்கையை வாழ்வா... அதை நீ பார்ப்பே... உன்னை நான் பாக்க வைப்பேன்..!"

- எப்படி?

(தொடரும்) ●

"மாறுவேடத்தில் வந்தது மன்னர்தான்னு எப்படி கரெக்டா கண்டுபிடிச்சு அடிச்சாங்க?"

"டீக்கடை வாசல்லே நின்னுட்டு, 'யாரங்கே'ன்னு கேட்டிருக்கார்!"

- திருப்பூர் சாரதி

**அ**ர்ச்சனா மிக சந்தோஷமாக அவள் விரும்பிய வாழ்வை வாழ்வாள் என்றால் அது எப்படி?

இந்திரஜித் விஷ்ணுவாகிய பிரதாப்பின் பேச்சைக் கேட்டு விக்கிப்போடு பார்த்தான்.

"என்ன பாக்கறே..? அது எப்படி நடக்கும்னுதானே?"

இந்திரஜித் முகம் ஆமோதிப்பு பாவனையைக் காட்டியது.

"பார்ப்பே.. அதை நீ பார்ப்பே!"

"எ...ப்...ப...டி...?" - என்று இழுவையில் ஈனசுரத்தில் கேட்டான் இந்திரஜித்.

"அப்படித்தான்... நீ இனி என்கிட்ட கேள்வி எல்லாம் கேட்கக் கூடாது இந்திரஜித். நான் சொல்றதை செய்யறது மட்டும்தான் உன் வேலை..."

"................"



"என்ன முழிக்கறே? என்னை எப்படி சமாளிக்கறதுன்னே தெரியல இல்ல?"

"................"

"அதுக்குப் பேர்தான் விதி. உனக்கு தப்பை தப்பில்லாம செய்யத் தெரியல இந்திரஜித். பணம் இருந்தா எல்லாத்தையும் சாதிச்சிட முடியும்னு நீ நினைச்சே... ஆனா அது இருந்தா மட்டும் போதாதுன்னு உனக்கு இப்ப புரிஞ்சிருக்கும்."

"ரொம்பவே புரியுது விஷ்ணு... ஒரு சில மணி நேரத்துல என் வாழ்க்கை இப்படி எல்லாம் திரும்பும்னு நான் நினைச்சுக்கூட பார்க்கல. தேஜா மூலமா இன்னும் சிலரைக் கொல்றதுதான் என் திட்டமா இருந்தது. ஆனா தேஜாவையும் அவன் கூட்டத்தையும் கொல்ற திட்டமா அது மாறினதை இப்பகூட என்னால ஜீரணிக்க முடியல. ஆமா போலீஸ்



வந்து ட்ரேஸ் பண்ணி நம்மை பிடிச்சிட்டாங்கற பயம் உனக்கு இல்லையா?"

"நம்மையா..? உன்னைன்னு சொல்லு! நான் உனக்கு உதவி செய்தவன். அவ்வளவுதான்! ஆனா நீதான் கொலைகாரங்கறதுக்கான ஆதாரம் இதோ இந்த செல்போன்ல வீடியோவா இருக்கு. அதுல நீதான் தேஜா மேல பெட்ரோலை ஊத்தறே. தீயைப் பத்த வைக்கறே... பாக்கறியா?"

"நோ... நோ... என்ன பயமுறுத் தாதே. என்னை இதோட விட்ரு..."

"பயப்படாதே... தேஜா அப்புறமா அவன் கூட்டத்தோட சாவை போலீஸ் சந்தோஷமாத்தான் கொண்டாடும்! தொழில் போட்டில கொலைகள் நடந்ததாதான் நினைக்கும். அவனுக்கு திரும்பின பக்கமெல்லாம் எதிரிகள்... அதுல யாரோ செய்ததாதான் கடைசியா முடிவுக்கு வருவாங்க. அவ்வளவு ஏன் அவனை என்கவுன்டர்ல போட்டுத்தள்ள நியமிக்கப்பட்ட அந்த போலீஸ் ஆபீஸர் நான்தான் செய்தேன்னுகூட சொல்லி பேர் வாங்க முயற்சி செய்யலாம்.

அதனாலே குறிவெச்சு உன்கிட்ட வந்து நிப்பாங்கங்கற பயத்தை விடு... அப்படி வரும்போது பாத்துக்கலாம். அதுக்குள்ள உன் கணக்கை நான் எப்படி முடிக்கறேன்னு மட்டும் பாரு... இந்த உலகத்துல இப்போதைக்கு நீ பயப்பட வேண்டியது எனக்கு மட்டும்தான். வேறு எதுக்கும் இல்லை... காரை எடு..."

"எடுக்கறேன்... அ...டு...த்து..."

"அடுத்து என்ன செய்யணும்னு தானே கேக்கறே?"

"ஆமா..."

"ஆமா என் அப்பா அம்மாவை இப்ப எங்க வெச்சிருக்கே?"

- விஷ்ணுவாகிய பிரதாப் அடுத்து அதைத்தான் கேட்பான் என்று யூகித்து வைத்திருந்தவன் போல் மிக வேகமாக "அவங்க பத்ரமா வண்டலூர் பக்கத்துல இருக்கற என்னோட ஃபார்ம் ஹவுஸ்ல இருக்காங்க விஷ்ணு. நீ... யு.எஸ்.ஸுக்கு ஆபீஸ் விஷயமா போயிருக்கறதா சொல்லித்தான் அவங்களை அங்க கூட்டிக்கிட்டுப் போனேன்."

"மிச்சத்த நான் சொல்றேன்... யுஎஸ். போற விஷயமா என் பையன் என்கிட்ட ஒரு வார்த்தைகூட சொல்லலியேன்னு என் அப்பா

"மன்னா, ஒரு பாடல் இயற்றி உள்ளேன்!"

"ஐபிஎல் மேட்ச் ஆரம்பிக்கும் முன் பாடித்தொலையும், புலவரே!"

-சேலம் ரியாஸ்

சொல்லியிருப்பாரே...?"

"அ... ஆமா...!"

"ரொம்ப அவசரம்... உங்களை என் பொறுப்புல விட்டுட்டுப் போயிருக்காருன்னு நீ சொல்லியிருப்பியே...?"

"அ... ஆமாம்... அப்படியேதான் சொன்னேன்."

"இங்க தனியா இருந்து கஷ்டப்படாதீங்க என் ஃபார்ம் ஹவுஸுக்கு வந்துடுங்கன்னு சொல்லி வண்டலூர்ப் பக்கமா இருக்கற உன் ஃபார்ம் ஹவுஸுக்கு கூட்டிக்கிட்டு போயிட்டே. ஏன்னா அர்ச்சனா தேடிக்கிட்டு வந்து பாக்கும்போதுதான் வீட்ல யாருமே இருக்கக்கூடாதே... சரியா?"

"சரி... சரி..."

"அவங்க செல்போன் டவர் கிடைக்கல, டெலிபோன் லைனும் வரலைன்னு சொல்லியே சமாளிச்சிக்கிட்டு வர்றே... அப்படிதானே?"

"க... க... கரெக்ட் விஷ்ணு... பக்கத்துல இருந்து பார்த்த மாதிரியே சொல்றியே...?"

"நீயும் கரெக்டா சொல்லிட்டே இந்திரஜித்! ஆவியா நான் அப்ப நீ விட்ட ரீலை எல்லாம் கேட்டுக்கிட்டு உன்கூடதான் இருந்தேன்..."

- விஷ்ணுவாகிய பிரதாப் சொல்லி முடிக்கவும் இந்திரஜித்திடம் நெற்றி புடைத்து தெரிக்கத் தொடங்கியது. அருகில் டோர் ஸ்லைடில் மினரல் வாட்டர் பாட்டில் இருந்தது. வேகமாய் அதை எடுத்து குடிக்கப் போனான்.



மிக வேகமாக அதைப் பிடுங்கி வெளியே எரிந்த விஷ்ணுவாகிய பிரதாப், "என்ன ரொம்பத் தாகமாக இருக்கா?" - என்று சற்று ஆவேசமாகக் கேட்டான்.

"ஆமா..." - வியர்க்க விறுவிறுக்க தலையாட்டினான் இந்திரஜித்.

"தவி... நல்லா தவி... ஆனாலும் இப்ப என் உடம்பை இழந்துட்டு நான் தவிக்கற தவிப்பு முன்னால இதெல்லாம் ஒண்ணுமேயில்லை இந்திரஜித். அது தெரியுமா உனக்கு?"

ஓங்கலான குரலில் காரின் உள்கூடே அதிரும்படி கேட்டான் விஷ்ணு.

"வி... வி... விஷ்ணு உன் அப்பா அம்மாவை நான் விட்டுட்றேன். அவங்கள நான் பத்ரமாதான்



வெச்சிருக்கேன்,'' - என்று சமாளிக்கப் பார்த்தான் இந்திரஜித்.

"அது எனக்கும் தெரியும். அவங்கள எப்படிக் கொல்றது, எப்ப கொல்றதுங்கறதுலதான் உனக்குக் குழப்பம். நான் இப்படி வராமப் போயிருந்தா நீயேகூட அவங்க கழுத்தை நெரிச்சு கொன்னுட்டு உன் ஃபார்ம் ஹவுஸ்லயேகூட புதைச்சிருப்பே... இல்லையா?"

"விஷ்ணு... உன்கிட்ட எதையும் இனி மறைக்க முடியாதுங்கறது எனக்குத் தெரிஞ்சு போச்சு. நீ என் எல்லா திட்டத்தையும் அப்படி அப்படியே சொல்லிகிட்டு வர்றே. நான் எல்லாத்துக்கும் உன்கிட்ட மன்னிப்பு கேட்டுக்கறேன். தயவு செய்து என்னை விட்டுடு..."

"உன்னை விட்டுட்டா என் பிரச்னை எல்லாம் தீர்ந்திடுமா?"

யோகவதனப் பயிற்சி தரும் பட்டாச்சார்யாவின் அந்த ஆசிரமத்தில் பேரமைதி!

காற்றில் ஒரு இலைச் சருகு அசைந்தால் அந்த சப்தம் கூட துல்லியமாகக் கேட்ட நிலையில் பட்டாச்சார்யாவின் அறை முகப்பில் கட்டப்பட்டிருந்த மணியை மூன்று முறை ஒலித்து சப்தம் எழுப்பினார் பட்டாச்சார்யாவின் உதவியாளர் ஸ்ரீவத்சவா!

அப்படி ஒலித்தால் எல்லோரும் பட்டாச்சார்யாவை காண வரவேண்டும் என்பது பொருள். அதேபோல் எல்லோரும் தங்கள் குடில்களில் இருந்து வரத்தொடங்கினர்.

வெண்ணிற குர்தா ஜிப்பாதான் ஆசிரம உடை! கோபி சந்தனம் நெற்றி மையத்தில் தங்களின் கட்டை விரல் பருமனுக்கு இருந்தாக வேண்டியதும் கட்டாயம். ஆசிரமத்துக்குள் எங்கும் செருப்பணிந்து செல்லக்கூடாது. பாதங்கள் மண்ணில் அழுந்தப் பதிய நடக்க வேண்டும் என்பது முக்கியமான விதிகளில் ஒன்று.

எல்லோரும் அந்த விதியைப் பின்பற்றி பட்டாச்சார்யாவின் ஆசிரம் நோக்கி வந்த வண்ணமிருந்தனர். எவரிடமும் அநாவசியப் பேச்சோ பதற்றமோ ஏதுமில்லை. விஷ்ணுவும் அவர்களில் ஒருவன். அவனை சில வயது முதிர்ந்தவர்கள் மட்டும் ஒரு மாதிரி பார்த்து புன்னகைத்தார்கள். அந்த நூறு பேர்களில் பட்டாச்சார்யாவிடம் கேள்விகள் அதிகம் கேட்டவன் விஷ்ணுதான். கேள்வி கேட்க ஒரு தெளிவும் தெம்பும் வேண்டும். சில கேள்விகள் நம்மை அப்படியே காட்டிக் கொடுத்து விடும். விஷ்ணுவிடம் அம்மட்டில் எந்த எச்சரிக்கை உணர்வுமில்லை. மனதில் பட்டதை பேசுபவனாகவும், கேட்பவனாகவுமே அவன் இருந்தான்.

பட்டாச்சார்யாவை கிட்டத்தட்ட ஒரு பிணம் போல அவன் பார்த்தபோது மட்டும் ஆச்சர்யமடைந்தான். அவனிடம் மட்டும் ஸ்ரீவத்சவாவும் "நீ குருவின் நாடித் துடிப்புகளைச் சோதித்துப் பார்ப்பதென்றால் பார்த்துக் கொள்ளலாம்,'' என்று அனுமதியளித்தார்.

அவனும் தயங்காமல் மணிக்கட்டு நாடியை பிடித்துப் பார்த்துவிட்டு பின் மார்பின் மேல் தன் தலையைச் சரித்து காதை வைத்து இதயத்துடிப்பையும் பரிசோதித்தான். எல்லாமே நின்று விட்டிருந்தது!

"நீதானே சொன்னே அர்ச்சனா சந்தோஷமா அவ விரும்பற வாழ்க்கை வாழ்வான்னு..."

"அவ வாழ்ந்தா ஆச்சா... நான் வாழ வேண்டாமா?"

"எனக்கு இதுக்கு என்ன பதில் சொல்றதுன்னே தெரியலியே..?"



"நானும் உன்கிட்ட பதில் எல்லாம் கேட்கலியே...?"

"அப்படின்னா..?"

"மூடிகிட்டு நான் சொல்றதை மட்டும் செய்... அதுல ஏதாவது சொதப்ப நினைச்சே இதுவரை ஒரு ஆவியா என் சக்தியைக் காட்டாத நான் அதையும் காட்டும்படி ஆயிடும்."

"ஐயோ... இப்ப நீ பேசற பேச்சும், செய்யச் சொல்றதுமே என்னை உண்டு இல்லைன்னு பண்ணிகிட்டிருக்கு. இதுல அதையும் நீ காட்டினே நான் செத்துடுவேன் விஷ்ணு..."

"சரியா சொன்னே இந்திரஜித்! ஆனா நீ சாகக்கூடாது! உன்வரைல சாவுகூட ஒரு விடுதலை... அது உனக்கு அவ்வளவு சுலபத்துல கிடைக்கக் கூடாது. நீ நிறைய பார்க்க வேண்டி இருக்கு. உன் கையால நிறைய காரியங்கள் நானும் செய்ய வேண்டியிருக்கு."

"விஷ்ணு..."

"ஃபார்ம் ஹவுஸுக்கு காரை விட்றியா?"

"இதோ இப்பவே..."

- இந்திரஜித் காரை வேகமாகக்

தூங்குவது போல் ஆனால் சவமாக பட்டாச்சார்யா கிடந்தார். விஷ்ணுவுக்குள் சலனம் ஏற்படத் தொடங்கியது. 'தான் அவசரப்பட்டு விட்டோமோ? குருவையே சோதித்து விட்டோமோ? நல்ல சீடன் இல்லையோ?' இப்படி கேள்விகளும் அவனுக்குள் மூண்டன.

ஒரு முதிர்ந்த பெண்மணி மட்டும் கண்களில் கண்ணீர் கசிந்திட "ஸ்வாமி... உங்களை இந்தக் கோலத்தில் பார்ப்பதை நான் பெரும் பாவமாகக் கருதுகிறேன். நீங்கள் ஆத்மபரிசோதனை செய்திருக்கத் தேவையேயில்லை. சிலருக்கு சந்தேகம் என்பதற்காக இப்படியா செயல்படுவீர்?" என்று வாய்விட்டுப் புலம்பி அழுதாள். அந்தப் பெண்மணியை சிலர் ஆறுதலாக அழைத்துச் சென்றனர். அந்தப் பெண்மணி விஷ்ணுவைப் பார்த்தவிதமும் அத்தனை சரியில்லை. விஷ்ணுவுக்கும் புரிந்தது. அவன் மௌனமாக தன் குடிலுக்குத் திரும்பியபோது கிளி ஒன்று அவன் அங்கு வாசித்து விட்டு திறந்த நிலையில் வைத்திருந்த 'விண்ணும் மண்ணும்' என்கிற புத்தகம் மேல் அமர்ந்திருந்தது!

கிளப்பினான். காரும் வண்டலூர் நோக்கி ஓடத் தொடங்கியது.

பங்களாவில் மூங்கில் ஊஞ்சலில் ஒரு பக்கமாய் சாய்ந்த நிலையில் அமர்ந்திருந்தாள் அர்ச்சனா. அப்போது அர்ச்சனா என்றபடியே உள்ளே வந்தாள் அபிராமி.

வந்தவளை மிகச் சோர்வாக பார்த்தாள் அர்ச்சனா.

"வெரி சாரி அர்ச்சனா..! ஒருபக்கம் விஷ்ணுவோட துரோகம் இன்னொரு பக்கம் உன் அப்பாவுக்கும் சீரியஸ்னு கேள்விப்பட்டேன். எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியல..."

- என்று ஆறுதலாகப் பேச்சைத் தொடங்கினாள் அபிராமி.

அர்ச்சனாவிடம் தொடர்ந்து மௌனம். அப்போது அவள் ஆப்பிளிடம் சிணுங்கல். ஏதோ செய்தியின் வருகை.

என்னவென மெல்லத் திறந்து பார்த்தவளுக்கு கண்ணைக் கரித்தது. உள்ளே வாட்ஸ்அப் திரையில் விஷ்ணுவும் தாரிணியும் மாலையும் கழுத்துமாக காட்சி தரும் அந்த திருமணக்கோல புகைப்படம். இந்திரஜித் திட்டப்படி விஷ்ணுவின் செல்போனில் இருந்து மாஃபிங் செய்த ஒரு கல்பிரிட்டு மூலம் அனுப்பப்பட்டிருந்தது.

மிக வேகமாக அதை அணைத்தவள் ஊஞ்சலில் இருந்து எழுந்து அருகிலுள்ள இன்டோர் பிளான்ட் அருகே சென்று அதன் இலைகளை வேகமாய்க் கிள்ளிப் பறிக்கத் தொடங்கினாள். கண்களில் கண்ணீர் முட்டித் திரண்டது.

"அச்சோ... என்ன இது? என்ன பண்றே? அது நீ டார்ஜிலிங் போனப்ப வாங்கிட்டு வந்த பிளான்ட்! அதையா அழிக்கறே?"



என்று அபி குரல் கொடுக்கவும்தான் தன் தப்பும் இனம்புரியாத தவிப்பும் அவளுக்குப் புரிந்தது.

"சாரி... சாரிடி... ஜஸ்ட் ஐ ஆம் பேத்தடிக்..."

"ஆமா அப்படி எதை இப்ப வாட்ஸ்அப்ல பார்த்தே?"

"நீயே அந்த கண்றாவியப் பார்..."

- என்று போனை அவள் வசம் தந்திட அவளும் திறந்து பார்த்து திகைப்பை முகத்தில் காட்டினாள். அப்போது வெளியே கிஷன்லாலின்

கார் புறப்படும் சப்தம் கேட்டு சற்று பால்கனி வரை வந்து வெளியே பார்த்தாள் அர்ச்சனா.

ஒரு பெரிய டிபன் கேரியர் பின்சீட்டில் ஏறிய நிலையில் டிரைவர் முன்னால் ஏறி காரைக் கிளப்பியிருந்தான். கார் அருகே சமையல்கார செஃப் பகவத்சிங்!

மார்பை மறைத்து கட்டியிருந்த ஆப்ரன் கிளாத்தை கூட கழற்றாமல்

> "கொரோனா பாதிப்பு இருக்குற ஊர்ப் பெயரை தவறுதலாக மாத்திப் போட்டுட்டோம், சார்!"
>
> "அப்ப 'ஊரு மாறின கொரோனா'ன்னு பாக்ஸ் நியூஸ் போட்டுடுங்க!"
>
> – ந.விஜய்ஆனந்த், தோப்புத்துறை.

நின்றிருந்த பகவத்சிங் கார் கிளம்பவும் உள்ளே திரும்புவது தெரிந்தது.

இன்டர்காமில் பகவத்சிங்குக்கே அழைப்பு விடுத்தாள்.

சிங்கும் லைனில் வந்தார்.

"ஆமா சாப்பாடு யாருக்கு போகுது.. அதுவும் அப்பா கார்ல?"

"உங்க பிதாஜிக்குதான் மேடம்..." என்ற பகவத்சிங் "நீங்க சாப்பிட வர்றீங்களா.. ஃபிஷ் ஃப்ரை, முட்டை பொரியல்னு ஸ்பெஷல் டிஷ் மேடம். பிதாஜிதான் போன் பண்ணி செய்து அனுப்பச் சொன்னார்," என்று முடிக்கவும் அர்ச்சனாவுக்குள் பெருந்திகைப்பு.

சாகக்கிடக்கறவருக்கா ஃபிஷ் ஃப்ரையும் முட்டை பொரியலும் என்றும் கேள்வி.

அப்போது திரும்பவும் அந்தக் கல்யாண புகைப் படத்தைப் பார்த்தபடி இருந்த அபிராமியிடமும் ஒரு சந்தேகம்.

"அச்சா... விஷ்ணு யு.எஸ். போய் அங்க நடந்திருக்கற கல்யாண போட்டோதானே இது?'' என்று கேட்க, அர்ச்சனாவும் ஆமோதிப்போடு பார்த்திட,

"எனக்கென்னவோ டவுட்டா இருக்கு. பேக்ட்ராப்ல இருக்கற பில்டிங்ல மேக்பத்துங்கற லெட்டர்ஸ் தெரியுது பார். இந்த மேக்பத் பில்டிங் யு.எஸ்.ல இல்லை-ஆஸ்திரேலியாவுல அடிலெய்ட்ல லியாண்டர் சர்க்கிள்ள இருக்கு. என் கசின் இப்ப இங்கதான் ஒர்க் பண்றான்," என்று கூறியபடியே புகைப்படத்தைக் காட்டவும், அர்ச்சனாவுக்குள் சந்தேகம் பற்றி எரிய ஆரம்பித்தது. அடுத்த நொடியே மாஸ்க்கை எடுத்து அணிந்தவள் துப்பட்டாவால் தலையை மூடிக் கொண்டு யார் என்றே தெரியாதபடி ஆஸ்பத்திரிக்குதான் முதல் குறி வைத்தாள்.

**(தொடரும்)**

மர்மத் தொடர் 12

**ஹா**ஸ்பிடல் நோக்கிப் புறப்பட்ட அர்ச்சனாவை அபிராமி தடுத்தாள்.

"நில்லு அர்ச்சனா.. எங்க கிளம்பிட்டே..?"

"என்னை சுத்தி தப்பா ஏதோ நடக்குது அபி.. மூச்சு கூட விட முடியாம ஆக்சிஜன் மாஸ்க்கோட படுத்திருக்கற என் அப்பாவுக்கு ஃபிஷ் ஃப்ரை, எக் பொரியலெல்லாம் போகுது. ஆச்சரியமா இல்ல..?"

"ஆமா... ஆச்சரியமாத்தான் இருக்கு. இந்த போட்டோ கூட ஒரிஜினல் இல்லை.. எல்லாமே தப்பாத்தான் இருக்கு."

"அப்பா ஏதோ நாடகமாடுறாரோன்னு தோணுது. இந்திரஜித் ஏதோ பண்ணிக்கிட்டிருக்கான்.."



"சரி, இப்ப ஹாஸ்பிடல் போய் என்ன பண்ணப் போறே?"

"என் டவுட்டை க்ளியர் பண்ணிக்கறேன். அப்பா நடிக்கறது உறுதியாயிட்டா இந்திரஜித்தை நான் சும்மா விடமாட்டேன். விஷ்ணுவைகூட அவன்தான் ஏதாவது பண்ணியிருக்கணும்.."

"சரி நட.. போய்க்கிட்டே பேசுவோம். ஆனா ஒண்ணு நாம ரொம்ப எச்சரிக்கையா நடந்துக்கணும்.."

-அபிராமி 'உனக்கு உதவ நான் இருக்கிறேன்' என்பது போல் பேசவும் அர்ச்சனாவுக்கு அப்போதைக்கு அது மிக இதமாய் இருந்தது!

**வ**ண்டலூர் பண்ணை வீடு!

காரில் இருந்து இறங்கி வேகமாய் உள் நுழைந்த விஷ்ணுவாகிய பிரதாப்பிடம் ஓர்



அபார துடிப்பு. உள்ளே சுவாமி படம் ஒன்றின் முன் விளக்கேற்றி வைத்திருக்கும் நிலையில் விஷ்ணுவின் அப்பா சடகோபன் சஹஸ்ர நாமம் சொல்லிக் கொண்டிருந்தார். அம்மா அருகில் சுருண்டு படுத்திருந்தாள். பிரதாப் வரவும் நிமிர்ந்து பார்த்தார்.

"யாரு...?'' என்று குரல் கொடுத்தார்.

"நான்.. நான் பிரதாப்! விஷ்ணு சாரோட அசிஸ்டெண்ட்," என்று அவர் முன் பிரதாப் அவரை ஒரு மாதிரி பார்த்தான். பின்னாலேயே இந்திரஜித்தும் வந்து நின்றான். இந்திரஜித் உடம்பில் ஒரு இனம்புரியாத நடுக்கம்..

இறந்த ஒருவன் இப்படி ஒரு உடம்பின் உள்ளே புகுந்து வந்து தன்னைப் பெற்றெடுத்தவர்களைப் பார்ப்பதை இந்திரஜித் கதைகளில் கூட படித்ததில்லை.

இப்போது அவன் வரையில் அது நேரில் நடந்தபடி இருக்க, விஷ்ணுவின் அப்பா படபடக்கத் தொடங்கினார்.

"விஷ்ணு இப்ப எங்க..? ஏன் எங்களோட ஒரு போன்ல கூட பேசமாட்டேங்கறான்..? இப்படி அவன் ஒருநாளும் எங்கள தவிக்க விட்டதில்லை. நானாவது பரவாயில்லை. என் மனைவி ரொம்பவே மனசொடிஞ்சு போயிட்டா.

வெளியே போய் போன் பண்ணிப் பேசலாம்னா எங்களால இங்க இருந்து வெளிய போகவே முடியல. ஹோம் அரெஸ்ட் மாதிரிதான் நான் ஃபீல் பண்றேன். உண்மைய சொல்லுங்க. எங்க என் விஷ்ணு. நான் இப்பவே அவன் கூட பேசியாகணும்.."

- அவர் பிரதாப்பின் கையைப் பிடித்துக்கொண்டு படபடத்தார். இந்திரஜித்துக்கு அந்த நொடிகள் மிக அலாதியானவை. சுருண்டு படுத்திருந்த விஷ்ணுவின் அம்மாவும் எழுந்துகொண்டு, "விஷ்ணு வந்துட்டானா?" என்று கேட்டாள்.

"நீங்க கவலைப்படாதீங்க... இந்தாங்க போன். இப்ப உங்க மகன் உங்களோட பேசுவார்.. நான் உங்கள இங்க இருந்து கூட்டிக்கிட்டு போகத்தான் வந்திருக்கேன்.."

-என்று பிரதாப் தன் செல் போனை அவர் கையில் கொடுத்து

"கொரோனா விழிப்புணர்வு அதிகமாயிடுச்சு!"
"ஆமாம். நேத்து ராத்திரி, வீட்டில் தூங்கிக்கிட்டு இருந்த என்னை எழுப்பி, மாஸ்க் போடாம தூங்குனதுக்காக அபராதம் வாங்கிட்டாங்க!"
- எஸ். மோகன், கோவில்பட்டி.

விட்டு திரும்பி இந்திரஜித்தைப் பார்த்தான். அந்தப் பார்வை இந்திரஜித்தை வெலவெலக்கச் செய்தது.

அப்படியே அவனை தள்ளிக்கொண்டு வெளியே வந்தவன் வந்த வேகத்தில் மாறி மாறி அவன் கன்னத்தில் அறைந்துவிட்டு அருகில் கிடந்த மண்வெட்டியை எடுத்து ஒரே போடாக போடுவதற்காக கையை ஓங்கினான்.

"ஐய்யோ விஷ்ணு... என்னை எதுவும் செய்துடாதே..." என்று



அப்படியே சரிந்து காலில் விழுந்து கதறத் தொடங்கினான் இந்திரஜித்.

விஷ்ணுவாகிய பிரதாப்பும் மண்வெட்டியைக் கிழே போட்டு விட்டு சற்று ஆசுவாசப்பட்டான். பின்,

"உள்ள அவங்ககிட்ட போ... நான் என் போன்ல இருந்து இப்ப அவங்க மகனா பேசப்போறேன். பேசி முடிக்கவும் அவங்கள கொண்டு போய் எங்க அபார்ட்மென்ட்ல விட்டுடணும். அதுக்குப் பிறகு நேரா ஹாஸ்பிடலுக்குத்தான் போகப்போறோம். அங்க இருக்கு ஒரு பெரிய கச்சேரி..."

- என்று கையை ஒரு விதமாய் ஆட்டிக் கொண்டு சொன்னவிதம் இந்திரஜித்தை அப்படியே நொறுக்கிவிட்டது. அப்படியே ஓட்டமாக அங்கிருந்து ஓடி தலைமறைவாகி விடக்கூட அவன் மனது எண்ணியது.

"என்ன தலைமறைவாயிட லாம்னு நினைக்கிறியா?"



- என்று கச்சிதமாக அப்போது கேட்கவும் இந்திரஜித் மேலும் வெலவெலத்தான்.

மனதில் நினைப்பதை அப்படியே சொன்னால் யாருக்குத்தான் திகில் தட்டாது?

இந்திரஜித் பதில் கூற முடியாதபடி வெறித்தான்.

"நீ எங்கேயும் தப்பி ஓட முடியாது... வேணும்னா நான் இப்பவே உனக்கு அனுமதி தர்றேன்! போ... மூணு மணி நேரம் நான் இங்கேயேதான் இருப்பேன். அதுக்குப் பிறகு புறப்பட்டு நீ எங்கே ஒளிஞ்சிருக்கியோ அங்க வந்து நிப்பேன்.

நான் உன்னை மாதிரி உடம்புக்குள்ள அடைபட்டிருக்கிற

**வி**ஷ்ணு அந்தக் கிளியை ஆச்சரியத்தோடு பார்க்கவும், அது புத்தகத்தை விட்டு பறந்து அருகிலுள்ள டிரெஸ்சிங் டேபிள் கண்ணாடி மேல் போய் அமர்ந்தது. திறந்திருந்த ஜன்னல் வழியாக வந்த அந்தக் கிளி, பயந்து திரும்பி பறந்து செல்லாமல் கண்ணாடி மேல் அமர்ந்த நிலையில் 'விஷ்ணு' என்றது!

அது பெயரைச் சொல்லி அழைக்கவும் விஷ்ணுவிடம் ஓர் ஆச்சரியம். விலங்கினங்களில் குறிப்பாக பறவையினத்தில் கிளிகள் பேசும். அதற்கு பயிற்சி தரவேண்டும். ஆனால் இங்கே பேசிய கிளி விஷ்ணுவின் பெயரைச் சொன்னது அவன் வரையில் ஓர் ஆச்சரியத்தைத் தந்தது. அவன் ஆச்சரியப்படும்போதே திரும்பத் திரும்ப விஷ்ணு விஷ்ணு என்று சொல்லிவிட்டு ஜன்னல் வழியாக விருட்டென்று வெளியேறியும் சென்றது.

விசித்திரமான அனுபவம்!

ஒருபுறம் குருவான பட்டாச்சார்யாவை சவமாகப் பார்த்த காட்சி, மறுபுறம் குடிலுக்குள் கிளி பெயர் சொல்லி அழைத்த சம்பவம்... இரண்டையும் அசை போட்டபோது வாழ்க்கை என்பதே எதிர்பாராத வகைகளால் ஆன ஒன்றே என்ற கருத்து தோன்றி, அதை அவன் அசை போட்டபோது திரும்பவும் மணியோசை ஒலித்தது.

பட்டாச்சார்யாவிடம் இருந்து அழைப்பு!

அவருக்கு விபரீதமாய் ஏதாவது நேர்ந்துவிட்டதோ என்கிற கவலையோடும் பதற்றத்தோடும் விஷ்ணு திரும்பிச் சென்று பார்த்தபோது, பட்டாச்சார்யா உயிருடன் நாற்காலியில் அமர்ந்து சீடர்களுடன் பேசிக் கொண்டிருந்தார்.

அவரை முன்போல பார்க்கவும்தான் விஷ்ணுவுக்கும் நிம்மதியாயிற்று. பட்டாச்சார்யா அவனைப் பார்த்த உடனேயே கிளியின் குரலில் அது விஷ்ணு என்று அழைத்தது போலவே மூன்று முறை அழைத்தார். அப்படியே "விண்ணும் மண்ணும் புத்தகத்தை 12-ஆம் பக்கம் வரை படிச்சிருக்க போலிருக்கே," என்றார்.

அந்தக் கேள்வியே கிளி வடிவில் வந்தது அவர்தான் என்பதை அவனுக்கு உணர்த்திவிட்டது. அடுத்த நொடியே

ஜீவனில்ல.. விட்டு விடுதலையான ஆத்மா! உனக்கு பஞ்சபூத தடைகள் உண்டு. எனக்கு எதுவும் கிடையாது. அதை நிரூபிச்சு காட்டட்டுமா?"

- விஷ்ணுவாகிய பிரதாப் கேட்ட விதமே மிரட்டலாக இருந்தது.

"இல்ல.. இல்ல.. நான் எங்கேயும் போகல.. உன் பேச்ச கேட்கறேன்.." - என்று கையிரண்டையும் கூப்பி அழுதான் இந்திரஜித்.

"அது... போ உள்ற! என் அப்பா கூடவும் அம்மா கூடவும் நான் பேசணும். அவங்க எதிர்ல பேசினா நான் செத்தது தெரிஞ்சிடும். இங்க இருந்து போன்ல பேசி சமாளிக்கறேன். நான் பேசறதை நீயும் கேள். போ.."

- உட்புறம் கைகாட்டி விஷ்ணுவாகிய பிரதாப் சொல்ல, இந்திரஜித்தும் வீட்டினுள்

அவனிடம் பெரும் பரவசம்.

"குரு... இந்த உலகத்தில் இப்போதைய மக்கள் தொகை 760 கோடின்னா அதுல எனக்கு மட்டும்தான் விசித்திர அனுபவம் ஏற்பட்டிருக்கு. காரணம் நீங்க! யோக சாதனையோட உச்சம் நீங்க. உயிரினங்கள்ல மனிதன் மேலானவன்ங்கறதையும் நிருபிச் சிட்டீங்க.

இந்த நொடி நான் யோகிகளை, சித்த புருஷர்களை கண்களுக்கு புலனாகிற கடவுளாகத்தான் நினைக்கிறேன். யோக ரகசியங்கள் அவ்வளவையும் கத்துக் கறதுதான் என் லட்சியம் இப்போ..." என்றவனை சற்று ஆற்றுப்படுத்திய பட்டாச்சார்யா,

"விஷ்ணு... இது கார்ப்பரேட் உலகம்! வரும் காலம் அவர்கள் கைக்குத்தான் போகும். விஞ்ஞானத்தோட விளைவு அது! இந்த கார்ப்பரேட்களுக்கு நடுவுல மெய்ஞானம்ங்கற நம் யோகம், வேதம், இவையெல்லாம் காப்பாற்றப்படணும்னா உன் மாதிரி ஒருவன் அங்க இருக்கணும். அதனால நீ ஒரு பேன்ட், சட்டை போட்ட யோகியா, ஆங்கிலமும் உலக பாஷைகள் அவ்வளவும் பேசமுடிந்த ஒரு சாதுர்யனா இருக்கணும். நீ இருப்பேன்னு நான் நம்பறேன். உனக்கு நான் பல பயிற்சிகளை தரப்போறேன். அதுல நயன வசியம் முக்கியமானது. தன் உடம்பை தன் முழுக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கும் ஒருவனுக்கு இந்த நயனவசியம் ரொம்ப சுலபமானது! இது வசப்பட்டுட்டா ஜல்லிக்கட்டு காளைல இருந்து சீறி வரும் பாம்பு வரை சகலத்தையும் பார்வையாலயே கட்டுப்படுத்தி தடுத்து நிறுத்திடலாம். ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ள முடியாத நிலையில் பேச்சின் மூலமாகவே தூங்க வைக்கலாம்; உடல் உபாதைகளைக் குறைக்கலாம். அவ்வளவு ஏன் ஒருவரை நாம சந்திக்க விரும்பினா போதும் அவர் நம்மைத் தேடி நம் எதிர்ல வந்து நின்று கூப்பிட்டீங்களான்னு கேட்பார்.

எல்லாமே யோகத்துல சாத்யம். அதை முழுமையா கற்பிக்கிறதுக்கு பேர்தான் 'யோக வதனம்' என்றார்.

விஷ்ணுவுக்கும் குருவாகிய அவர் விருப்பமும் எதிர்பார்ப்பும் புரிந்தது.

நுழைந்தான்.

அவனைப் பார்த்த நொடி, "ஏப்பா... இன்னும் என் பையன் பேசலையே... இங்க டவர் கிடைக்காதுன்னு சொன்னியே... வெளிய போனா கிடைக்குமா?" என்று விஷ்ணு அப்பா சடகோபன் கேட்க அந்த நொடி அவர் கைபேசி ஒலிக்கத் தொடங்கியது.



திரையில் விஷ்ணு என்கிற பெயரும் தெரிந்திட "என் பிள்ள.. என் பிள்ள..." என்றபடியே ஆன் செய்து காதில் வைத்தார் சடகோபன்.

"அப்பா.."

"விஷ்ணு.."

"விஷ்ணுவேதாம்பா.. எப்படிப்பா இருக்கிங்க?"

"எப்படி இருக்கோமாவா... அதை ஏன் கேக்கறே? இப்படியா சொல்லாம கொள்ளாம போவே.. நாங்க இங்க நாங்களாவே இல்லை. இந்த இந்திரஜித்தான் ஏதோ பண்றானோன்னு குழம்பிப் போயிட்டோம். இப்ப நீ எங்க இருக்கே? எப்படி இருக்கே?" - என்று அவர் கேட்க, "யாரு நம்ப விஷ்ணுவா, செத்த என்கிட்ட கொடுங்கோ.." என்று விஷ்ணுவின் அம்மா கேட்க, "செத்த இருடி ஸ்பீக்கரை போடுறேன். ரெண்டு பேருமே கேக்கலாம்,'' என்ற சடகோபன் ஸ்பீக்கர் போனைப் போடவும் விஷ்ணுவின் குரல் அங்கே இந்திரஜித் காதிலும் ஒலிக்கத் தொடங்கியது.

"அம்மா.. அப்பா.. நீங்க கவலைப்பட வேண்டாம். நான் யுஎஸ்ல இருந்து வந்துட்டேன். ரொம்ப அவசர ஜோலி. அதான் சொல்லவோ பேசவோ முடியல. இனி பிரச்னை இல்லை- நான் நாளைக்கு நம்ப வீட்டுக்கு வந்துடுவேன்.."

"அப்படியாப்பா... ரொம்ப சந்தோஷம்! ஆனா அதை காலி பண்ணிட்டானேப்பா இந்த இந்திரஜித்.."

"அதனால என்ன... திரும்ப போயிட்டா போச்சு. என் சார்பா பிரதாப் உங்களுக்கு உதவியா இருப்பான்!"

"நாளைக்கு நீ எப்ப வருவே?"

"எப்ப வேணா வருவேன். நீங்க எந்த வருத்தமும் படாம சந்தோஷமா இருங்க. அது போதும்!"

- விஷ்ணுவின் ஆறுதலான பேச்சு அவன் அம்மாவைத் தூண்டிவிட்டு "விஷ்ணு.. விஷ்ணு.. இப்படி பேசறதுக்கு நீ ஸ்கைப்ல வந்து உன் முகத்தைக் காட்டேன்- எனக்கு உன்னப் பாக்கணும்போல இருக்குடா.." என்றாள்.

அவளுடைய அந்தக் கோரிக்கை இந்திரஜித்தைக் கலக்கியது.

விஷ்ணு அதை எப்படி சமாளிக்கப் போகிறான் என்று அவன் பார்த்தபோது "இதோ இப்பவே ஸ்கைப்ல வரேம்மா..." என்கிற பதில் இந்திரஜித்தை ஆச்சரியப்படுத்த, கச்சிதமாக வெளியே இருந்து பிரதாப்பின் குரல் இந்திரஜித்தை அழைத்தது.

"இந்திரஜித் வா இங்க.."

"ஆகவே, உங்களது பொன்னான வாக்குகளை..."

"மானத்தை வாங்காதீங்க, தலைவரே! இது நன்றி அறிவிப்புக் கூட்டம்!"

- திருப்பூர் சாரதி

- இந்திரஜித்தும் வெளியே சென்றான். பிரதாப் ஒரு மாதிரி பார்த்தான். அதேசமயம் உள்ளே அப்பா அம்மா இருவரும் "விஷ்ணு.. இப்பதான் எங்களுக்கு நிம்மதியா இருக்கு. ஒரு வாரமா நாங்க நாங்களாவே இல்லை. ஆமா தலைல என்ன கட்டு..?" என்று அவர்கள் கேட்பதும் காதில் விழுந்தது.



இந்திரஜித் குழப்பமானான். பிரதாப்போ சிரித்தபடி "என்ன தலைய சுத்துதா?" என்று கேட்டிட இந்திரஜித் மிரண்டு தெரிக்க,

"இந்த உடம்புக்குள்ள இருக்கற நான் எப்படி அங்க ஸ்கைப்ல தெரியறேன்னுதானே?'' என்று சற்று அழுத்தம் கொடுத்து கேட்க, இந்திரஜித்திடம் இப்போது பெரும் குழப்பம்!

அப்போது அவன் கைபேசியில் அர்ச்சனாவிடம் இருந்து அழைப் பொலி. பிரதாப், "ஸ்பீக்கரை போட்டு பேசு," என்று கூறவும், நடுங்கியபடியே எடுத்து ஆன் செய்தான் இந்திரஜித்!

"இந்திரஜித்.. என் விஷ்ணுவை என்ன செய்தே? எனக்கு வந்த வீடியோ, போட்டோ எல்லாமே மாஃபிங்னு எனக்குத் தெரிஞ்சு போச்சு. ஆஸ்பத்திரில அப்பாவுக்கும் உடம்புக்கெல்லாம் ஒண்ணுமில்ல... நல்லா ஃபிஷ் ஃபிரையை சாப்ட்டுகிட்டிருக்கார். ரெண்டு பேரும் சேர்ந்து ஏதோ சதி பண்ணியிருக்கீங்க. எங்க என் விஷ்ணு? அவரை என்ன செஞ்சே?" - அர்ச்சனா டாப் கியரில் எகிறினாள்.

"உம் சொல்லு.. கூலிப்படையை வெச்சு கொன்னுட்டேன்னு சொல்லு...'' என்று பிரதாப்பும் சிரித்துக்கொண்டே தூண்டினான். ஆனால் இந்திரஜித்தால் அந்த உண்மையை ஒப்புக்கொள்ள முடியவில்லை. பேச வார்த்தை வராமல் வெறித்தான்.

"சொல்லு.. என்னைக் கொன்னு எரிச்சு சாம்பலாக்கிட்டேன்னு சொல்லு...'' - என்று பிரதாப் மௌனமாக பார்த்திட குரல் மட்டும் ஒலித்தது!

இது என்ன விந்தை! இது எப்படி சாத்தியம்? என்று இந்திரஜித் மிரண்டு பதைக்கவும், பிரதாப்பின் பின்னால் இருந்து விஷ்ணுவின் அசலான உருவமே வெளிப்பட்டு நின்றது!

**(அடுத்த இதழில் முடியும்)**

மர்மத் தொடர்

13



**விஷ்ணுவை அங்கே உயிருள்ள அவனுக்கான உடலோடு பார்க்கவும் இந்திரஜித்துக்கு மயக்கமே வரப் பார்த்தது. மயங்கிக் கீழே விழப் போய் பின் தடுமாறி நின்றான். அவன் செல்போனில் அர்ச்சனாவின் குரல் கசிந்தபடியே இருந்தது.**



"ஏய் இந்திரஜித்... ஃப்ராட்! விஷ்ணு யு.எஸ். போயிட்டதா சொன்னதெல்லாம் பொய்தானே..? என் விஷ்ணு இப்ப எங்க? சொல்லப் போறியா இல்லை போலீஸ் கம்ப்ளைன்ட் கொடுக்கவா?"-என்று விடாமல் கேட்பது விஷ்ணுவின் காதுகளிலும் ஒலித்தது. மெல்ல இந்திரஜித்தை நெருங்கியவன் அந்த போனை வாங்கி ஸ்விட்ச் ஆஃப் செய்தான்.

அப்படியே சைகை காட்டி அந்த பண்ணை வீட்டின் மறைவான ஒரு பகுதிக்குச் சென்றான். பிரதாப்பும் பின் தொடர்ந்தான்.

அங்கே இந்திரஜித், விஷ்ணுவின் கால்களையே பார்த்தபடி நின்றான்.

"என்ன இந்திரஜித்... நான் பேயா இல்ல அசலான விஷ்ணுவான்னு சந்தேகமா இருக்கா?" - விஷ்ணு பேச

ஆரம்பித்தான்.

"எனக்கு தலையே சுத்துது... விஷ்ணு நிஜமா நீ சாகலையா?" - என்று திக்கல் திணறலுடன் கேட்டான் இந்திரஜித்.

"செத்திருக்க வேண்டியவன் தான்! ஆனா நான் கத்து வைச்சிருந்த யோகக்கலையால தப்பிச்சேன். என்னைக் கடத்திக்கிட்டுப் போய் அந்த தேஜா ரொம்பவே சித்ரவதை செய்தான். உன் பேரைச் சொல்லி சொல்லியே அடிச்சான். உயிர் போன பிறகு கடல்ல கல்ல கட்டித் தூக்கிப் போடுறதுதான் அவன் ஸ்டைல்.



என்கிட்டயும் அதுக்காக அவன் முயற்சி செய்தப்ப, அவனை நான் என் வசியப் பார்வையால பலமுறை தடுமாற வைச்சேன். என் பேச்சையும் கேட்க வைச்சேன். என் விலை ஒரு கோடிங்கறது ரொம்ப கம்மி... உன்கிட்ட அதாவது உன் மாமா கிஷன்லால் கிட்ட 2000 கோடி இருக்கு... என் பேச்சை நீ கேட்டா பல கோடிகளை அடைய முடியும்னு அந்தப் பணவெறி பிடிச்சவன்கிட்ட பணத்தாலயே நெருங்கினேன். அவனும் எப்படி?ன்னு கேட்டான். என்ன கொன்னுட்டதா சொல்லி முதல்ல ஒரு கோடியை வாங்கிடு... அப்புறமா கொலை செய்ததை வீடியோவா எடுத்துக் காட்டி மேற்கொண்டு பணம் கேளு. கொடுக்க மறுத்தா வீடியோவை அர்ச்சனாவுக்கு அனுப்பிடுவேன்னு மட்டும் சொல். அதன்பிறகு பணம் எவ்வளவு வேகமா வருதுன்னு மட்டும் பாருன்னேன்.

பணத்துக்காக எதையும் செய்ற தேஜாவுக்கு நான் சொன்ன ஐடியா ரொம்பவே பிடிச்சுப் போச்சு. நானும் என் மனோவசிய சக்தியால அவனை மெல்ல என் பிடிக்குக் கொண்டு வந்து, நூறு கோடி வரை நிச்சயமா கறக்க முடியும். கொடுக்கலேன்னா அந்த வீடியோ போலீஸுக்குப் போயிடும்ன்னு சொல்லு...

இப்படியே கொலைகாரனா நீ தலைமறைவு வாழ்க்கை வாழறதுக்கு இந்தப் பணத்தோட வெளிநாட்டுக்குப் போய் செட்டில் ஆயிட்றத பத்தி யோசி... என்றேன்.

அதுக்கப்புறம் தேஜா என்னை தன்னோட மெண்டராவே பார்க்கத் தொடங்கிவிட்டான்!"



**ஏன்டா, சோகமா இருக்கே?"**
**"பிரசாரத்தின்போது நம்ம வீட்டுக்கு வந்து துணி துவைச்சுக் கொடுத்த மாமா தோத்துட்டாராம், மம்மி!"**
**- சேலம் ரியாஸ்.**

- விஷ்ணு நடந்து முடிந்த தன் ஒரு பாதியை சொல்லிவிட்டு இந்திரஜித்தை உற்றுப் பார்த்தான்.

"இப்படி கூட்டணி அமைச்ச நான், அவனை உன்னை வைச்சே போட்டுத் தள்ளினது எதனாலன்னு இப்ப உனக்குள்ள அடுத்து ஒரு கேள்வி எழுந்திருக்குமே..?"

"ஆமா... ஆமா..."



"நான் அவன்கிட்ட இருந்து என்னை விடுவிச்சிக்கத்தான் அப்படி ஒரு ஐடியாவைக் கொடுத்தேன். அப்படி கொடுக்கும்போதே அவனை எப்படியாவது அழிச்சிடணும்ங்கற எண்ணமும் எனக்குள்ள உருவாயிடிச்சு... ஏன்னா அவன் இந்த சமூகத்தோட புற்றுநோய்!

அவனோட அடுத்தகட்ட மிரட்டலும் உனக்கு வந்தது. நீயும் உன் மாமா கிஷன்லாலும் அவன் இரண்டாவது தடவையா கேட்ட பணத்துக்காக மல்லுக்கட்ட ஆரம்பிச்சீங்க. உன் மாமா அதாவது என் பாஸ் அதுக்கு சம்மதிக்காம மும்பையைச் சேர்ந்த தாதா பெல்லாரிபாபு கிட்ட போகப்போற தகவல் வரவும் தேஜாகூட பயந்தான். இது என்ன பிள்ளையார் பிடிக்க குரங்காகிவிடும்போல இருக்கேன்னு என்கிட்ட கோபப்பட்டான். நான்தான் அப்ப தைரியமா இருக்கச் செய்தேன். கிஷன்லாலை ஒரு ஆக்ஸிடென்ட்டுக்கு ஆளாக்கி படுக்க வைச்சா அந்த தாதா விஷயமும் படுத்துடும்னேன். கவனம் ஆஸ்பத்திரிக்கு மாறிடும்னேன்.



எருமையைக் குறுக்க ஓடவிட்டு காரை தடுமாற வைச்சு ஆக்ஸிடென்ட்டையும் தேஜாவே பண்ணினான். திட்டமிட்டபடியே கிஷன்லாலும் ஆஸ்பத்திரில போய் சேர்ந்தார்.

நீ முடிவுகள் எடுக்கறவனா மாறினே. பணத்தைக் கொடுத்து தேஜாவைப் பயன்படுத்தி நீ இன்னும் பல கொலைகள் செய்யத் தயாரானே..! அந்தப் புள்ளில நான் உன்னை வைச்சே தேஜாவையும் அவன் கூட்டத்தையும் அழிச்சி, உன்னையும் என் கன்ட்ரோலுக்குக் கொண்டு வர முடிவு செய்தேன். இந்த இடத்துலதான் என் முயற்சிக்கு பிரதாப்பைப் பயன்படுத்த தயாரானேன்! பிரதாப்புக்குத் தகவல் தந்து

என்னைச் சந்திக்கும்படி செய்து அவன் உடம்புக்குள்ள நான் ஆவியா புகுந்து ஆட்டி வைக்கற அந்த ஸ்க்ரீன் ப்ளேவையும் சொன்னேன்.

உங்களோட பச்சை துரோகம், எனக்கு நேரிட்ட கொடுமையான அனுபவம், அர்ச்சனாவோட காதல் தவிப்பு இதெல்லாம் பிரதாப்பை எனக்கு உதவத் தூண்டிவிட்டது.

என்னைப் போல பேசவும், நடக்கவும் சொல்லித் தந்தேன். நான் யோகவதனப் பயிற்சி எடுக்கறப்போ பிரதாப்பும் அந்த நூறு பேருல ஒருத்தன்! அதனால எல்லாமே பிரதாப்புக்கு சுலபமா வயப்பட்டது.

**"உனக்கு எங்கேயும் சந்தேகம் வந்துடக் கூடாதுன்னு எருமையைக் கொண்டு மிரட்டலைத் தொடங்கி, அதைக் கொண்டே உன் காரையும் தடுத்து, பிரதாப்பையும் உன் கார்ல ஏறவைச்சு, என் ஆவி நாடகத்தை போன் மூலமாவே பிரதாப்பை வைச்சு டைரக்டும் பண்ணேன்."**



உனக்கு எங்கேயும் சந்தேகம் வந்துடக் கூடாதுன்னு எருமையைக் கொண்டு மிரட்டலைத் தொடங்கி, அதைக் கொண்டே உன் காரையும் தடுத்து, பிரதாப்பையும் உன் கார்ல ஏறவைச்சு, என் ஆவி நாடகத்தை போன் மூலமாவே பிரதாப்பை வைச்சு டைரக்டும் பண்ணேன்.

இப்ப இருக்கற இந்த கொரோனா காலம் மாஸ்க், கூலிங் கிளாஸ், கேப்னு நான் என்னை மறைச்சிக்கிட்டு அதேசமயம் சுதந்திரமா நடமாட எனக்கு சௌகர்யமா இருந்தது.

உன் கையாலேயே தேஜா கூட்டத்துக்கே முடிவுரையும்

அந்த யோகவதன வகுப்பின் நூறாவது நாளில் விஷ்ணு அந்த நூறு நாளில் தான் கற்ற சில யோகாசனங்களை செய்து காட்டியதோடு உடல், உள்ளம் என்கிற இரண்டிலும் தனக்குள் பெரும் மாற்றம் நேரிட்டிருப்பதை 'அனுபவப் பகிர்வு' நிகழ்வில் பகிர்ந்து கொண்டான்.

உடல் எடை 12 கிலோ குறைந்து, முகத்தில் பொலிவு கூடியிருந்தது. மனதிலும் ஒரு அசாத்திய தெளிவு!

காரணமில்லாமல் ஒரு காரியமும் இந்த உலகில் நடப்பதில்லை என்பதுதான் பிரதான புரிதல்.

ஒரு பயணத்தில் பர்ஸ் தொலைந்து போவதில் இருந்து, எதிர்வீட்டுக்காரர் தவறான புரிதலில் விரோதம் பாராட்டுவது வரை நம்மைச் சுற்றி நடக்கின்ற எல்லா செயல்பாடுகளின் பின்னாலும் ஒரு காரணம் ஒளிந்துள்ளது. அதை அறிவால் அறிவது ஒருவிதம்,

அப்படி அறிய முயலும்போது சில நேரங்களில் காரணம் தெரியவரும் _ பல நேரங்களில் காரணங்கள் தெரிய வராது _ அப்படி தெரியவராத தருணத்தில் அதை கர்மவினையாக உணர்ந்து அதை அனுபவித்து கடப்பது என்பதே முதிர்ச்சி.

இந்த யோகக் கலை வசப்பட ஒருவகை விதிப்பாடும் வேண்டும். எல்லோராலும் இதில் உச்சம் காணமுடியாது. கோடானுகோடி பேர் இருந்தாலும் ஒருவனே அரசனாக முடியும், ஒருவருக்கே சில வித்தைகள் நூறு சதம் வயப்படும்.



அந்த விதிப்பாடு ஒருவனுக்கு இருந்தால் முதலை வாயில் விழுந்தாலும் அது அவனை விழுங்காது உமிழ்ந்துவிடும்.

விஷ்ணுவும் அப்படி ஒருவனே என்று பட்டாச்சார்யா கண்டுகொண்டார்.

தனக்குப் பிறகு தன் யோகக் கலைக்கு அவனே தலைமை ஏற்கவேண்டும் என்றும் விரும்பினார்.

எழுதினேன். இப்ப நீ கொலை செய்யத் தூண்டின குற்றவாளி மட்டுமில்ல... கொலையும் செய்த குற்றவாளி... இரண்டுக்குமே ஆதாரம் என் கைல வீடியோவா இருக்கு.

என் பேச்சைக் கேட்டு நடக்கறத தவிர உனக்கு வேற வழியே கிடையாது இந்திரஜித்."

தெளிவான தன் திட்டங்களை விஷ்ணு விளக்கி முடித்த நிலையில் இந்திரஜித்திடம் ஒரு மிகக் கனமான மௌனம்.

"இனி ஆவியா உன்னை ஆட்டி வைக்கத் தேவையில்லை. நேராவே ஆட்டி வைக்கறேன். மாஸ்க்கும், கூலிங் கிளாசும் போதும். நான்



தெரியாம போக... பிரதாப் என் அப்பா அம்மாவோட என் ஃப்ளாட்டுக்குப் போகட்டும். நாம ஹாஸ்பிடலுக்குப் போவோம்.

அங்கயும் நடிச்சிக்கிட்டு கிடக்கற அந்தக் கோடீஸ்வரனையும் உன்னைப் போல ஆக்கி பார்க்க வேண்டாமா? கமான் புறப்படு..."

"வே... வேண்டாம் விஷ்ணு. அர்ச்சனாவைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு நீ சந்தோஷமா வாழு. என்னையும் விட்டுடு- நான் இந்த நாட்டைவிட்டே ஓடிப் போயிடுறேன்.

உனக்குக் கோடி புண்ணியம்."

"பைத்தியக்காரா... இப்பகூட வாழற ஆசைதான் உன்கிட்ட இருக்கு. நீ செய்த தப்பு உனக்கு பெருசாவே படலை. உன்னையும் சரி, உன் மாமாவையும் சரி அவ்வளவு சுலபமா என்னால விடமுடியாது. என் வரைல நீ கூட இரண்டாவதுதான். அந்தஸ்த்துக் காய்ச்சலல உன்னை ஒரு கருவியா பயன்படுத்தி என்னை அழிக்கத் தயங்காத அந்த பெரிய மனுஷன்தான் என்னோட முதல் குறி! நட..."

**ஹா**ஸ்பிடல்!



இந்திரஜித்தும், விஷ்ணுவும் உள்நுழையும்போது கிஷன்லால் டிஸ்சார்ஜ் செய்யப்பட்டு புறப்பட்டுக் கொண்டிருந்தார்.

விஷ்ணு ஸ்விட்ச் ஆஃப் செய்த இந்திரஜித்தின் செல்போனை ஆன் செய்து கிஷன்லாலிடம் பேசச் சொன்னான். ஸ்விட்ச் ஆன் செய்த மறு நொடியே கிஷன்லால் லைனில் வந்துவிட்டார்.

"ஏ முட்டாள்... இப்படியா செல்போனை ஸ்விட்ச் ஆஃப் பண்ணி வைப்பே? அரை மணி நேரமா நான் உனக்கு ட்ரை பண்ணிக்கிட்டிருக்கேன் தெரியுமா?"

"சாரி அங்கிள்... வெரி சாரி..."

"போடா ஃபூல்... எல்லாமே கெட்டுப் போச்சு! நான் நடிக்கிறது அர்ச்சனாவுக்குத் தெரிஞ்சிடுச்சி. என் முன்னால வந்து நான் சாப்பிட ஆரம்பிக்கும்போது கையும் களவுமா பிடிச்சிட்டா. அவளை என்னால சமாளிக்க முடியல...

என் விஷ்ணுவை நீங்கதான் ஏதோ செய்துட்டீங்கன்னு உண்மையை நெருங்கிட்டா. ஹாஸ்பிடல்ல இனியும் இருந்தா நம்ம குடும்ப விஷயம் சந்தி



சிரிச்சிடும்னு நான் டாக்டர் கிட்ட சொல்லிட்டு டிஸ்சார்ஜ் பண்ணிக்கிட்டு நம்ம பங்களாவுக்குப் போய்க்கிட்டிருக்கேன்.

அர்ச்சனாவை இப்ப சமாளிக்கணும். நீ எங்க இருக்கே... என்ன பண்ணிக்கிட்டு இருக்கே?"

- படபடவென்று பொரிந்து தள்ளினார் கிஷன்லால். ஸ்பீக்கர்

"முதல் பகுதியில
வில்லனா வர்றீங்க!"
"அடுத்த பகுதியில
நல்லவனா வர்றேனா?"
"உருமாறிய வில்லனா வந்து
ரொம்பப் பாதிப்பை
ஏற்படுத்துறீங்க!"
- எஸ்.மோகன், கோவில்பட்டி

போனில் அவர் பேசுவது விஷ்ணுவின் காதிலும் விழுந்தது. ஸ்பீக்கர் பயன்பாட்டை விரலால் மூடியபடி, "பங்களாவுக்கு வந்து நேர்ல சொல்றேன்னு சொல்..." என்றபடி விரலை எடுக்கவும், "அங்கிள் நான் இப்ப நம்ம பங்களாவுக்கு வரேன்... நேர்ல பேசுவோம்," என்று முடித்தான்.

"அப்படியே அர்ச்சனாவுக்கும் போன் போடு..." என்கிற அடுத்த கட்டளைப்படி அவளுக்கும் போன் செய்தான்.

"அர்ச்சனா... விஷ்ணு பத்தின எல்லா உண்மைகளையும் சொல்றேன். நம்ம பங்களாவுக்கு உடனே வா..." என்றான்.

அவளும் அப்படியே காரில், அசுர வேகத்தில் திரும்பத் தொடங்கினாள்!



அர்ச்சனாவின் பங்களா!

அர்ச்சனா அரக்கப் பரக்க உள் நுழைந்தபோது உள்ளே வேலைக்காரர்கள் வெளியேற்றப்பட்டு, கிஷன்லாலும் இந்திரஜித்தும் மட்டும் இருந்தனர். இருவரிடமும் ஓர் அசாத்திய மௌனம். அர்ச்சனா அவர்கள் இருவரையும் அகண்ட விழிகளுடன் வெறித்தாள்.

சோபாவில் அமர்ந்திருந்த கிஷன்லால் எதிரில் நேருக்கு நேர் நின்று, "சொல்லுங்க. என் விஷ்ணு எங்கே? அவரை என்ன செஞ்சீங்க... கொன்னுட்டீங்களா? நீங்க எதையும் செய்வீங்க... உங்களுக்கு இந்த ஜாதி, ஸ்டேட்டஸ் இதெல்லாம்தான் பெருசு... எனக்கு உங்கள நல்லாத் தெரியும். என்ன செய்தீங்க என் விஷ்ணுவை?" என்று உச்ச ஸ்தாயியில் நரம்புகள் புடைக்க கத்தினாள். கிஷன்லால் ஸ்தம்பித்து வியர்த்த முகத்தோடு அர்ச்சனாவை மெல்ல ஏறிட்டார்.

அப்போது ஒரு மறைவிலிருந்து வெளிப்பட்ட விஷ்ணு அவள் முன் மாஸ்க்கை அகற்றி கூலிங் கிளாஸையும் கழற்றி "இதோ நான் இங்கிருக்கிறேன்," என்று நின்றான்!

'விஷ்ணு...' என்கிற உயிர்த்த குரலோடு அவனை நோக்கிச் சென்று அவளும் அவனைக் கட்டிக் கொண்டாள்.

கிஷன்லாலும், இந்திரஜித்தும் அமைதியாகப் பார்த்துக்கொண்டே இருந்தனர்.

"விஷ்ணு என்ன நடந்தது? எங்க போன நீ... இவங்க என்ன செஞ்சாங்க உன்னை... என்னை மறக்கச் சொல்லி ரொம்ப கஷ்டப்படுத்திட்டாங்களா?" என்று அணைப்பில் இருந்து விலகி கேள்விகளாய் அடுக்கினாள்.

"அர்ச்சனா, என்ன நடந்ததுங்கறத நான் அப்புறமா சொல்றேன். இந்த இடைப்பட்ட நாட்கள்ல நீ கொஞ்சம் கூட மனசு மாறாம என் மேல ரொம்பவே நம்பிக்கையோட இருந்தே பார்... அதுதான் என்னை ரொம்பவே கவர்ந்த விஷயம்!



என் மேல உனக்கு இருக்கற காதலை இந்த நாட்கள் எனக்கு அழுத்தமா புரிய வைச்சிச்சு. உன்னை நான் மனப்பூர்வமா ஏத்துக்கறேன். ஆனா ஒண்ணு- நீ மிஸ்டர் கிஷன்லால் மகளா இனி இருக்க முடியாது.

என்கூட நான் பணிபுரியப் போற ஆசிரமத்துல சேவை செய்யத் தயாரா இருக்கணும்... இந்த பங்களா, கார் லக்சுரி எல்லாத்தையும் விட்டுடணும்... ஓ.கேவா?"

அவன் கேட்க அவள் பதிலுக்கு அவனை இறுக்கமாக அணைத்து அந்த அணைப்பின் மூலமாகவே சம்மதம் என்றாள்.

அடுத்த நொடி தன் வசமிருந்த செல்போனை அவர்கள் இருவர் முன்பாக காட்டி,

"இந்திரஜித், நீதான் தேஜாவைக் கொலை செய்தேங்கறதுக்கான வீடியோ ஆதாரம் இதுல இருக்கு. கூடவே தேஜா கிட்ட என்னை கொல்ல நீ பேரம் பேசினதுல இருந்து எல்லாமே வாய்ஸ் ரெக்கார்டா இதுல இருக்கு.



இதுக்கெல்லாம் கருவி நீன்னா, காரணம் இதோ இந்த பெரிய மனுஷன். நீங்க செய்ததுக்கு எல்லா ஆதாரமும் இதுல இருக்கு.

சொல்லப் போனா, உங்க மானம் மரியாதை எல்லாமே இதுல இருக்கு. இது போலீஸ் கைக்குப் போனா உங்க எதிர்காலமே அவ்வளவுதான்..."



- என்றபடி அதை கையில் எடுத்துக் கொண்டவன் அருகில் அன்றைய தினசரி செய்தித்தாளும் அதில் தலைப்புச் செய்தியாக 'பிரபல கூலிப்படை தலைவன் தேஜா மரணம்!' என்று இருக்க உள்ளே விரிவான செய்தி!



'தேஜாவின் கூட்டம் கல்பாக்கம் சவுக்குத் தோப்பு பங்களாவில் பதுங்கியிருப்பது தெரிந்து சிறப்புப் படைப் பிரிவு அதிகாரி அய்யப்பராஜ் தலைமையில் போலீஸார் சுற்றி வளைத்தபோது தீ விபத்து ஏற்பட்டு அதில் அவனும் அவனது கூட்டாளிகளும் கருகிச் சாம்பலாகினர்!' என்கிற அந்தச் செய்தியைப் படித்தவன் சற்றே சிரிப்புடன் "இந்திரஜித்... நீ இனி போலீஸை நினைச்சு பயப்படத் தேவையில்லை.. ஆனா என்னை நினைச்சு இரண்டு பேரும் பயந்துகிட்டேதான் இருக்கணும். அதுதான் உங்க தலையெழுத்து! நான் உங்களவிட்டு விலகினாலும் உங்களை வாட்ச் பண்ணிக்கிட்டேதான் இருப்பேன். நல்ல காரியங்களுக்காக உங்களைத் தூண்டிக்கிட்டும் இருப்பேன்.

இப்பகூட நீங்க என்ன செய்யறீங்கன்னா கொரோனா ஒழிப்புக்காக அரசாங்கத்துக்கு அர்ச்சனா கன்ஸ்ட்ரக்ஷன்ஸ் சார்பா 100 கோடிய டொனேஷனா தர்றீங்க...

தருவீங்கதானே?" - என்று கேட்க, இருவரும் கோவில் மாடு போல தலையை ஆட்டினர்.

அர்ச்சனா அவன் பேச்சைக் கேட்டும், அவர்கள் தலையாட்டியதையும் பார்த்து மிரட்சியோடு விழித்தாள்.

"என்ன அர்ச்சனா... உனக்கு தலையும் புரியல காலும் புரியல இல்ல... சொல்றேன் விளக்கமா. எல்லாத்தையும் சொல்றேன்... இனி நமக்கு இங்க வேலை இல்ல... போவோமா?" - என்று கேட்டு அவர்கள் எதிரில் அவள் தோள் மேல் கைகளைப் போட்டவனாய் திரும்பி நடக்கத் தொடங்கினான். அவளும் நடந்தாள்.

ஆனால் கிஷன்லாலும் இந்திரஜித்தும் ஸ்தம்பிப்பின் உச்சிக்கே சென்றுவிட்டிருந்தனர்!

**(முற்றும்)**